*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TURE."




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்]* [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 21.] 1913ஹு ஆகஸ்டுமீ, பிரமாதீசஹு ஆவணிமீ [சஞ்சிகை. 5.

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminathaiyar, Editor, & Founder V. C.

S Subrahmaniem, Joint Hon. Secretary, Vivekachintamani Rev: Committee.

Lalita Publishing Co., Sole Agents and Managers 19, Adam St, Mylapore, S.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுங்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேக சிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கே உரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொணடே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்பிரம விவேகவிளக்கப் பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்ம விக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்தவா பாடஅது படுவர்: இகபர மிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றேருதினன் பழனியாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓ




## The Real Assets of a Nation.
## தேசத்தார் ஆஸ்தி.

——:(‡):——

"The real assets of a nation are not its coal-mines or wheat fields but the skill and character of its members. The State, if it is to be alive and vigorous, must be moulded by its individual citizens despite the assertion of confused thinkers that the citizen must be moulded by the State" ——Mr. H. R. Crosthwaite, I. C. S., Registrar of Co-operative Societies in Central Provinces in his article on "Unlimited liability as a national asset" in the Madras Bulletin of co-operation for June 1913.

"செல்வம் சகடக்கால் போல." "வறுமையும் உடைமையும் ஒருவழி நில்லா." "ஆறிடு மேடும், மடுவும்போல் ஆம் செல்வம்." இவை மூன்றும் செல்வத்தின் சுபாவ தர்மத்தைப் பற்றிய பழமொழிகள். செல்வம் வண்டியுருளைபோல் உருண்டுகொண்டே யிருக்கும் தன்மையது. அப்படியில்லாவிட்டால் அதற்கு சாய்கால் கிடையாது.

ஒருவன் பணத்தைப் புதைத்து வைத்து அதைப் பூதம் காப்பதுபோல் காத்துக்கொண்டிருந்தால் அது "செல்வம்" ஆகாது. அதை அவன் எவ்வளவுக்கெவ்வளவு எடுத்து வழங்குகிறானோ அவ்வளவுக்கு அவ்வளவு அதுசாய்காலுடையதாகி அவனுக்குச் செல்வமா யிருந்துதவும். செல்வம் என்றால் என்ன? செல்லும். வன்மை அளிப்பது எதுவோ அது செல்வம். "செல்லுதல் எங்கே"? இந்தக் கேள்விக்கு விடை யளிக்குமுன் இன்னொரு கேள்வி பிறக்கும். அது "நாம் வந்தது எங்கேயிருந்து?" என்பதே. எங்கேயிருந்து வந்தோமோ அங்கேயே நாம் செல்லுதல் உடையோமாவோம். உதாரணமாக, மழைநீர் எங்கே யிருந்து வந்தது? எல்லாரும் "வானத்திலிருந்து," அதாவது ஆகாசத்திலுள்ள மேகத்திலிருந்து என்று இலகுவாய் மறுமொழி சொல்வார்கள். ஆனால் மேகம் எங்கிருந்துண்டாயிற்று? சூரிய வெப்பம் சமுத்திர ஜலத்தில் படுவதினால் நீர், ஆவியாக மாறித் திரண்டதே மேகம். சமுத்திரத்திலிருந்து வந்த மேகம் மலையிலும் நிலத்திலும் பனியாகவும் மழையாகவும் பெய்து அவை அருவிகளாகவும் ஆறுகளாகவும் பெருகி மறுபடியும் சமுத்திரத்தையே நோக்கிச் செல்லுகின்றன அல்லவா?

அதுபோலவே மன்பதை யெல்லாம் வந்த விடம் நோக்கியே செல்லுதலுடையவர்களா யிருக்கிறார்கள். எந்தப் பராசக்தியினிடமிருந்து இந்தப் பிரபஞ்சமெல்லாம் உண்டாயிற்றோ அந்தப் பராசக்தியை அடையவே உலகெலாம் "செல்லுதல்" உடையதா யிருக்கிறது. ஆகையால் தான் "செல்வத்திற் செல்வம் அருட்செல்வம்" என்று பெரியோர் சொல்லி யிருக்கிறார்கள். கைப்பொருளாகிய செல்வமும் "செல்வம்" ஆவது உலகத்தில் ஜீவ யாத்திரை நடக்க இன்றியமையாததாக விருக்கும் காரணத்தாலே யன்றி வேறல்ல.

மனத் தெளிவுடையார் தேசத்தை க்ஷேத்திரமாகவும் தேசத்தாரை க்ஷேத்திரஜ்ஞனாகவும் பாவித்துப் பணிவிடையினால் பூஜிப்பார். இவர்கள் தான் உண்மையான தேசாபிமானிகள்.

தேசாபிமானம் என்பது கிரகஸ்தாச்ரம தர்மத்தின் இயல்புடையதன்றி வேறல்ல. கிரகஸ்தனுக்கு வீடு (இல்லம்) எப்படியோ அப்படியே தேசாபிமானிக்கு "தேசம்" முழுமையும் அவன் இல்லமாம். கிரகஸ்தன் குடும்ப க்ஷேமத்துக் குழைப்பதுபோலவே, தேசாபிமானி தேச க்ஷேமத்துக்கு உழைக்கிறான். இருவரும் அதற்கு அந்யமாயிருந் துழைப்பதல்ல. அநந்யமாகவே யுழைக்கிறார்கள். "அப்ராப்

தப்ராபணம் யோக:'' என்றபடி பெறற்கரிய பாக்கியத்தைப் பெறுதலின் பொருட்டுழைம்பது யோகம். இது ஏகாக்ரசித்தம் வாய்ந்தவர்களாலும் சித்த விருத்தி நிரோதம் செய்தவர்களாலுமே சாத்தியம். இவர்கள் முனிகளும் (Thinkers) ருஷிகளும் (Seers) ஆவார்கள். அபிமானமுள்ள வரையில் மனத் தெளிவு சித்திக்காது. ஆகையால் தேசாபிமானியும் இவர்களுக்கு ஈடாகமாட்டான். இவர்கள் மனத் தெளிவினுல் யோஜித்து சித்திக்க உழைத்த பாக்கியங்கள் ஜனங்கள் மனதில் வேரூன்றி நிலைத்திருக்கும்படி செய்வது தேசாபிமானி வேலை. "க்ஷேமௌ லப்தஸ்ய பாலனம்'' என்றபடி சித்திக்கப் பெற்றதைக் கைநழுவ விடாது பரிபாலித்து வருவதே க்ஷேமம். இதுவே பெருநிதியம்.

ஆகையால் ஒரு தேசத்தின் யோக க்ஷேமம் அதன் கண்ணுள்ள பொன் வெள்ளி முதலான சுரங்கங்களிலும் நன்ருக விளையும் வயல்களிலுமில்லை. ஆனுல் இவைகளை யெடுத்து உபயோகித்து வேலை செய்யும் ஜனங்களின் சாமர்த்தியத்திலும் குண விசேஷத்திலுமே யிருக்கிறது. ஒரு தேசத்தின் ஆஸ்தி அந்த தேசத்தாருடைய சாமர்த்தியத்திலும் குணத்திலு மிருக்கிறது. அறிவில்லாமல் சமர்த்தில்லை. மனப் பழக்க மில்லாமல் குணமில்லை. ஆகையால் ஜனங்களில் அறிவும் ('சித்' சக்தியும்) கல்வியும் (மனப்பழக்கமும்) விருத்தியாகச் செய்வதே தேச க்ஷேமத்தை யளிக்கும்.

இந்த உண்மையை மஹான்களா யுள்ளவர்கள் திருவடிபணிந்து உள்மர்மமறிந்து "அறிவைப் பரவச் செய்ய''க் கங்கணம் கட்டிக்கொண்ட நமக்கு இந்த உண்மையான கொள்கை மத்திய மாகாணங்களின் கூட்டுறவு சங்கங்களின் விசாரணை கர்த்தராகிய மிஸ்டர் க்ராஸ்த்வெய்ட் என்பவரைப் போன்ற ஸிவில் ஸெர்விஸ் மெம்பர்களால் அங்கீகரிக்கப் பெற்று அவர்களால் போதிக்கப்பட்டு வருவதைப் பார்க்க உள்ளத்துவகை ஊற்றுய்ச் சுரந்து பிரவாகமாய்ப் பெருகுகின்றது. பின்னுமவர் போதிக்கும் அரசியல் தர்மமொன்று பசுமரத்தாணி போல் விவேகசிந்தாமணியை வாசிப்போர் மனத்தில் பதியத்தக்கதா யிருக்கிறது. அரசியில் (ராஜ்யம் அல்லது தேசசமஷ்டி) உயிருள்ள தாய் வீரியம் குறையாம லிருக்கவேண்டில் அது முனிசிரேஷ்டர்களான (Clear thinkers) தேசவாஸிகளாம் நகரமாக்களால் (individual citizens) உருப்படுவதா யிருக்கவேண்டுமே யன்றி, ஜடத்துவம் பொருந்தியதான (State) ராஜ்யாவஸ்தையால் சிக்கனமான தேசவாசியை உருப்படுத்த யத்தனிக்கக் கூடாது. எல்லாம் கவர்ன்மெண்டுதான் செய்யவேண்டு மென்கிற நவீனக் கொள்கை யுள்ளவர்களெல்லாம் அவர் சொல்கிறபடி மனத் தெளிவடையாத பேதபாவனை யுடையவர்களாம்.

இராஜ்ஜியபாரம் என்பது ஒரு பெரிய பாரமேற்றிய வண்டி. தேசவாஸிகள் அவ்வண்டியை யிழுக்கும் குதிரைகளுக்குச் சமானம். குதிரை வண்டியை இழுக்க வேண்டுமேயன்றி வண்டி குதிரையைத் தள்ளுவது இயல்பல்ல, ஆதலால் தர்மமுமல்ல. ஆனுலும் தட்டுவாணிக் குதிரைகட்டிய ஜட்காவண்டிக்காரன் வண்டியினுருளையைத் தோள் கொடுத்துத் தள்ளி சண்டிக் குதிரையைச் செல்லவைக்கிறுன். வைத்தாலும் அது குதிரையின் சண்டித்தனத்துக்குப் பரிகாரமே யன்றி சவாரிதர்மமல்ல. இந்த உண்மையை உள்ளபடி யெடுத்தோதினதற்காக நாம் மிஸ்டர் க்ராஸ்த்வெய்ட் அவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

## The Ten-Root-Principles of Life.

### தசமூலக் கொள்கைகள்.

1: The world and wordly ever wait for opportunities (The wise create them).

1. “ஓடுமீ னோடிவர ஒருமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு.”

2. God plays hide and seek under the veil of maya to grant clear-vision to His votaries.

2. ஆடுமெயி லாடிவர அடியார்மனந் தெளிவுபெற
வோடி யொளிக்குமாம் தெய்வம்.

3. Knowledge without experience is the source of all evils and misunderstandings.

3. “படுகட்டை படு” வென்றான் பட்டதெல்லாம்
விட்டுணர, கெடுதி யெல்லாம் விளைக்கு
மதிகேடு.

4. Untruth betrays itself, the man and his friends.

4. நட்டாற்றில் கைவிட்டான் நட்பொக்கு
மேகண்டாய்,
பட்டாங்கில் லாதான்பால் நண்பு.

5. Those addicted to evil ways will never attain Freedom Great.

5. கெட்டார் கேடிழைப்பார் கெடுமெதியாட்
பட்டார்க் கெட்டாது வீடென்றுணர்.

6. The Insincere man, be he friend or foe, is always dangerous.

6. நட்டாரைப் போல்நடிக்கும் நயவஞ் சகநெஞ்சார்
நட்டாலும் விட்டாலும் கூற்று.

7. Death when it comes brings with it the courage to die: Be honest and fear not.

7. கூற்றுவனே தேற்றுவனால் குறையொன்று
மில்லையென்று மாற்றுக்குறை யாதபடி நில்.

8. As pure gold outshines its dross, so Intelligence pure outshines sense-knowledge or ‘science.’

8. பத்தரை மாற்றுப் பழுதில்லாத் தங்கம்நூற்
றெட்டரை மாற்றில்நுண் ணறிவாமென்றுழை.

9. Work proper purifies the mind and saves: Thy duty do and *live.*

9. உழைக்க வுழைக்க வுழைப்பே பிழைப்பாமென்
றுழைப்ப வுழைத்துப் பிழை.

10; Life and work are like wharp and whoof: Work to live and live to work thus weaving thy own destiny.

10. பிழைப்பு முழைப்பு மிழைக்க இழையுமென்
றிழையோட்டித் தானே பிழை.

11. St. Tirumoolar's Three Thousand sayings true when understood well leads one to Grace and Godliness.

11. மூலனோதிய மூவாயிரந் தமிழ் கற்றால்
வாலறிவன் நற்றாள்கண் டெய்யலாகும்.

தசமூலப்ரியன்.

---

## The Infinite Love.

**By Mr. Rabindra Nath Tagore.**

(*Poet Laureate of Asia*).

“I have ever loved thee in a hundred forms and times,
Age after age, in birth following birth.
The chain of songs that my fond heart did weave
Thou graciously didst take around thy neck,
Age after age, in birth following birth.
When I listen to the tales of the primitive past.
The love-pangs of the far distant times,
The meettings and partings of the ancient ages
I see thy form gathering light
Through the dark dimness of eternity
And appearing as a star ever fixed in the memory of all.
We two have come floating by the twin currents of love
That well up from the inmost heart of the Beginnigless
We two have played in the lives of myriad lovers
In tearful solitude of sorrow
In tremulous shyness of sweet union
In old, old love ever renewing its life.
The onrolling flood of the love eternal
Hath at last found its final perfect course.
All the joys and sorrows and longings of the heart,
All the memories of the moments of ecstacy.
All the love lyrics of poets of all climes and times
Have come from thee everywhere
And gathered in one single love at thy feet.”

An appreciation by an American Professor :—[The poem which illustrates the high qualities of Rabindra Nath Tagore's art is that entitled “ THE INFINITE LOVE ' .........“His patriotic songs are sung everywhere. He himself has trained numberless troubadours, who have carried these poems in their musical forms to all parts of Hindustan, and though the poet is now only little over forty years old, his song have already become a precious heri-

tage of the whole Indian people. In the early morning they are sung by Sankirtan parties that go about the streets to wake the people up from sleep to join in the service of God and mother-land. At scorching noon-time shepherds resting at the edge of the forest will sing the same songs to themselves and to the nature about them, and again in the evening as the boatmen go down the river and the village peasant flock homeward, they all sing the songs of Rabindra Nath Tagore."—*Professor Paul S. Reinsch of the Wisconsin State University U.S.A.*

This is how the work of Nation building is proceeded with by Master Masons who have realised their oneness with Nature. Will the active members of Our Association fo Helpers please note this for their guidance and oblige. The nation lives in the cottage and not in gilded palaces, crowded clubs or fashionable resteaurants.—Ed. V. C.]

——(:✻:)——

## அளவிலா அன்பு.

### வரகவி ரவீந்திரநாத் தாகோர் இயற்றியதின் தமிழ்மொழி.

——:(✻):——

I

அன்பே! உனையான் அனந்தமா யறிந்தேன் [ன்,
அறிந்துனைப் பல்காலும் பலருபமாய்த் தொழுதே
எடுத்ததோ ரெண்ணிலா ஜன்மமெல் லாமும்
பிறந்ததோர் கணக்கிலாக் காலமெல் லாமும்
அநவரதம் உனைத்தொழுதென் னிதயகம லத்திருந்
தொழுகுதேன் சுவைமலிந்த பாக்களை மாலையாப்
புனைந் தளிக்க வுன்கழுத்தி லதைத்தரித்தா
யளிக்குந் தொறு மின்னருள் புரிந்தெனக்கே.

II

ஆதிமுத லன்பே! யுன் வழிபட்டேன்!
ஆனாலுமுனை விட்டுப்பிரிந்தேனே பாவிநான்! [ன்
பிரிந்துன்னைக் கூடினேன் கூடியே பினும்பிரிந்தே
இதை யெல்லாம் கதைகதையா யென்னுள்ளம்
உணர்ந் திருகும் போதன்பே ஆற்றுகிலேன்
என்னென்பும் உருகுவதை யென் சொல்வேன்!
உன்னருமைக் கலையெல்லா முருவேற்றுத் தாரகமா
யிருந்தல்லோ! எனைக்காக்க இருக்கிறேன் நான்.

III

நீயுண்டு நானுண்டு—அன்புடனே அன்புசெய்வான்,
இருவருமே ஆதிய ஞதியுமா யிருந்தொளிரும்
சோதிவடி வதுவாம் சொல்லிறந்த மதிவழியே
ஒடியுலாவ வென்றுநித் திட்டோ மிவ்வுலகில்
காதலர்க ளெண்ணிறந்தோ ருள்ளிருந் துவகையுடன்
துன்புற் றுழன்றதுவும் நாமன்றே! நல்லிதயத்
துரையுமோ ரொப்பற்ற தூய்மையதுவாயிருந்து
[துன்பொழித்
தின்பமதே யுருவா யிருந்ததுவும் நாமன்றே!

IV

"அன்புருவே இன்பமடி இன்பமதூ மன்புருவே"
என்றுரை சொல் பொய் யாதே
யெல்லா ரிதயத்துளு மிருந்து நித்தியமாய்
நிராமயமாய்ப் பூரணபுராதனமா யுள்ளதுவே
பல்துளி பெருவெள்ள மானதுபோலம் மம்மா!
அன்பு வெள்ளம் கரை புரண்டு
நதியுண்ட கடலெனவே யெனையுண்டு வென்நினைவை
யுடனுண்டேக மிரண்டென்னு மெல்லாமாய் நின்
றதுவே!

V

அன்புபூ ரணமானல் அதற்கோர் குறையுமுண்டோ!
தன்வழியே தான்செல்லும் தண்ணளியு மதுவல்
[லோ!
என்புதோல் போர்த்தவுடல் பற்றிவாழ்ஜீவனெல்லாம்
படுதுன்பந் துயரோடு இன்பசுக மெல்லாமும்
வன்புதுன்பு செய்கொடுமை,வான்மாரிபோல்கருணை
பெய் தொழிலும், தொழிலற்று வுன்னயிர்த
கலையுண்டு தேனுண்டவண்டுபோல் ரீங்காரம் செய்
[துன் னைப்
பாடுதலும் தேடுதலும் ஆடுதலுமன்பேநீ அடிமை
[கொண்ட திறனல்லோ!

——:(✻):——

[வரகவி ரவீந்திர நாத் தாகோரவர்களுடைய இன்னிசைக்கவிகளை ஏழை யெளியவர்களும் வேலையாட்களும் மாடு மேய்ப்பவர்களும் பாடிக் களிக்கின்றனர்! படித்தார் படியாதார் எல்லாரும் கேட்டுச் செவிமடுத்துணர்ந்துய்ய அவர் பண்ணிசை பாடுவாரைப் பழக்கித் தெருக்கள்தோறும் ஸங்கீர்த்தனை செய்து கொண்டும் ஊர்கள்தோறும் பாடிக்கொண்டும் போக எத்தனையோபேர்களை தயாரித்து விட்டிருக்கிறார் அம்மாதிரி நாமும் செய்யவேண்டும்.]

## Children's Address of Welcome to The Viceroy.

(Sequel to the Children's Tribute of Love.)

## அரசர் பிரதிநிதியை அன்பாங்குழந்தைகள் நல்வரவு கூறியழைத்தல்.

—:(o):—

MOTTO:—"Let the Children Come unto me."

பல்லவி.

வாரும் வாரும் தர்ம துரையே,
தீரும் தீரு மெங்கள் குறையே!

1. திருமுகதரிசன மகிழ்வு—The Joy of Thy Weclome Presence.

1. ஜூன்மதி யிருபஃதில் குழந்தைக ளெல்லோரும்
கூடியே யுந்திரு நாளைப்பெருநாளாக் கொண்டாடினோம்!
வான்மதி போ லுள்ள வுந்திரு முகமலர்ச்
சோதியைக் கண்டுநா மகிழ்ந்திட வெம்மிடை,
வாரும் வாரும், தர்ம துரையே,
தீரும் தீரு மெங்கள் குறையே!

2. பொறுமையே பூஷணம்—The Jewel of Patience.

2. ஆதியிலிந்திர ப்ரஸ்தத்தை யாண்டவர் பாண்டவர்க்
கருமையாஞ் செல்வத் தலைவரா முதிட்டிரர்!
அவரைப்போல் தர்மம் தலைகாக்க வென்றே
அருமையாம் பொறுமையைப் பூஷண மாக்கொண்ட
துரையே, வாரும் வாரு மெங்கள்,
குறையெல்லாம் தீரும் தீரும்!

3. நிறைகுடம் தளும்பாது—The Heart that is full is agitated not.

3. குறையும் நிறையும் குணத்தைப் பொறுத்தது;
குறைகுட மென்றும் தளும்பவே தளும்பும்;
நிறைகுடம் போல்மன மன்பால் நிறையக்
குறைகுடம் போலது தளும்புமோ சொல்லீர்!
வாரும் வாரும், தர்ம துரையே,
தீரும் தீரு மெங்கள் குறையே!

4. மனக்குறை நிறைவு—The fulfilment of our Heart's Desire.

4. குழந்தைகளா மெங்கள் மனக்குறை தீரப்
பழந்தரு திருக்கையைக் காணவே தவித்தோம்!
மழைமுகங் காணுப் பயிர்போலே யெங்கள்
குழைமுகங் கண்டுநீர் தரிசன மளிக்க
வாரும் வாரும், தர்ம துரையே,
தீரும் தீரு மெங்கள் குறையே!

5. தாய்முகம் பிழைபொறுக்கும்—Mother Love Endures.

5. மழைமுகங் காணுப் பயிர்போலே வாடும்
தாய்முகங் காணுக் குழவிகள் மனமென்பர்;
தாய்முக மாவது தண்ணளி நிறைவால்
பிழைபொ றுக்கும்பே ரன்பது வேயாகும்!
வாரும் வாரும், தர்ம துரையே,
தீரும் தீரு மெங்கள் குறையே!

6. ராஜ தர்மம்—The Royal Dharma or The King's Duty.

6. கோழைமனந் தானேயம்மா குடிகெடுக்குங் கூற்றுரும்!
ஏழைமனம் நோகாமல் காப்பதுவே ராஜதர்மம்!
வாழைமரம் போலேயன்பர் என்பும் பிறர்க்குரியர்!
பேழைபெட்டிச் செல்வமெல்லா மேழைச்செல்வ மொப்பாமோ!
வாரும் வாரும், தர்ம துரையே,
தீரும் தீரு மெங்கள் குறையே!

7. ஏழைமனக்குறைநிறை—Love the fulfilment of all Heart's Desires.

7. மேழைச் செல்வம் கோழை படாஅதுபோல்
ஏழைமனம் தானதுவே கோழைபடா துய்யுமென்பர்;
ஏழைமனம் தாழ்ந்துமிக அன்புக்கழுங் குறையால்
ஏழைமனங் குறைநிறைய வெழுந்தருள்வார் அன்பாவார்!
வாரும் வாரும், தர்ம துரையே,
தீரும் தீரு மெங்கள் குறையே!

---

## THE CHILDREN'S ADDRESS OF WELCOME (rendered into English.)

CHORUS:

Welcome, welcome, righteous Lord,
Our hearts' desire's full-filled.

CHORUS:

I

On twentieth June we children all
In numbers gathered t' celebrate thy Birthday great!
Now to see thy lotus face which like the heavenly moon
On all benignant shines, we welcome thee to our midst.

CHORUS:

II

Of Yore, Yudishtra great the head of the Pandus
The shining city of Indrapat built and ruled;
"Let Dharma flourish" was his watchword great,
And like him of yore thou comest 'n our midst thy soul adorned with Patience great.

CHORUS:

III

Want and wealth on character depends
The Half-filled vessel when moved maketh noise and spills
But the mind which with Love is full like the pot full-filled
Is agitated not like the part-filled pot.

CHORUS:

IV

We children our minds' desire full-fill to see
Expectant stood to wait and watch the Hand of Grace;
And now our pining hearts thy welcome presence greet
Like leaves of grass on sundried plains the welcome shower doth greet.

CHORUS:

V

Like leaves of grass on sundried plain, for want of rain they fade,
So fadeth the child-mind at the hidden Free of Mother-Love they say:
And what is the face of Mother-love but the Patience
Supreme that bears and endures all for the sake of good!

CHORUS:

VI

The uncultivated mind indeterminate its own ruin compasseth!
To protect the bless'd poor from woes that Evil bring is the King's Duty plain
Like the plantain tree the man of Love is all in all to all
The hoarded wealth of mines and metal, the growing wealth of cultivation lacks aho!

CHORUS:

VII

As the wealth of cultivation never confuseth the soul
Even so, the cultivated mind, of passions bereft, salvation gains;
The poor in humility prayeth and cryeth for love their one on earth,
And he who in loving grace amid them amid there cometh to fulfil, He in swth is love inckmate.

CHORUS: Welcome, welcome, righteous Lord,
Our hearts' desire's fulfilled.

## Our Visit to the Steamer.
## நாங்கள் புகைக் கப்பல் பார்க்கப் போனது.

என் சிநேகிதர்களே!

எனக்கு புகைக் கப்பலைப் பார்க்கவேணு மென்கிற ஆசை உண்டாவது வெகு சாதாரணம். ஏனெனில் நான் நாட்டுப்புறத்தில் பிறந்து வளர்ந்தவள். பட்டணத்தில் வாழ்க்கைப் பட்டபின் அனேக நூதன விஷயங்களைக்கான ஆசையுண்டாயிற்று. அதனால் அறிவும் விசாலமாயிற்று. அப்படியே போனமாசம் இங்கே சென்னைத் துறைமுகத்தில் நின்ற ஒரு புகைக்கப்பலைக் காட்ட என்னை அழைத்துக் கொண்டு போனார்கள். இவைக ளெல்லாம் புதிய அனுபவங்களே. நான் பார்த்த விநோதங்களையும் அடைந்த சந்தோஷத்தையும் என் சிநேகிதர்களுக்கு தெரிவிக்கிறதினால் உபயோக முண்டென்று நம்பி இது எழுதலானேன்.

கடற்கரையிலிருந்து கப்பலைப் பார்த்தால் ஏதோ சிறிய ஒரு மாதிரியான தெப்பம் போல் தெரிந்தது. சிறு தோணிகளில் ஏறித்தான் கப்பலின் சமீபத்தில் போக வேண்டியது. தோணியில் போகிறது முதலில் புதிதாகையால், ஒரு திகிலையும் படபடப்பையும் உண்டாக்கினாலும் தொட்டிலில் ஆடுகிறது போல் வேடிக்கையாயிருக்கிறதினால் சந்தோஷமாக இருக்கிறது. தோணியை, துடுப்புகளாம், (கையில் பிடிக்கிற பக்கம் உருண்டையாகவும் மற்றொரு நுனி சப்பட்டையாகவும் இருக்கிற) நீளமான மரத்துண்டுகளைக்கொண்டு தண்ணீரில் தாக்கித் தாக்கித் தள்ளுகிறார்கள். இதில் ஒரு வேடிக்கை. தோணி போகவேணு மென்றால் தண்ணீரைத் தள்ளுகிறதாம்! ஒரு குதிரைவண்டி வேகமாய்ப் போகும் போது குதிரையின் அடிகளைக் கவனித்துப் பார்த்தால் குதிரை தன் அடிகளால் பூமியை உதைத்துத் தள்ளி விடுகிறதுபோல் தான் தோற்றுகிறது.

புகைக்கப்பலின் சமீபம் சேர்ந்தோம். மேலே யேறிப்பார்க்கவும் கடல் ஞாபகமே போய்விட்டது. ஏதோ ஊரிலுள்ள ஒரு பெரிய கட்டிடத்தில் இருக்கிறது போல் அப்படியே இருந்தது. ஜனங்கள் முலுமுலு வென்று இங்கும் அங்கும் திரிந்து கொண்டு இருந்தார்கள். கப்பலின் அடித்தளம் வெகு ஆழத்திலிருக்கிறது. அங்கே இருட்டு அதிகம். ஏதாவது சாமான்களும் யந்திரங்களும் அங்கே இருக்குமாம். கப்பலைப்போகச் செய்கிற முக்கியஎந்திரம் அங்கே தான் இருக்கிறதாம். அங்கேபோய்ப் பார்க்கவேண்டு மென்று கேட்டோம். அதற்கு அங்கே போகிறது அபாயகர மென்று சொல்லிவிட்டார்கள். மேல் மூன்றுதளங்கள்தான் பிரயாணிகள் புழங்குகிற இடங்கள். மூன்று மாடி வைத்துக்கட்டின ஒரு வீடு போல் இருந்தது. கப்பல் வெள்ளைக்காரர் மயமாக இருந்தது. அங்கே பார்த்த சில உபயோகமான விசேஷங்களைச் சொல்லுகிறேன்.

எல்லாவற்றிற்கும் மேலுள்ள மூன்றும் தட்டுப்படியிற் சுக்கான் என்று சொல்லப்படுகிற ஒரு யந்திரம் இருந்தது. அது பித்தளையால் செய்து பார்க்கச் சக்கரமாக இருந்தது. அந்தச் சக்கரத்துக்கு நடுவில் ஒரு செங்குத்தான பெரிய நீள இரும்புக்கம்பி இருக்கிறதாம். அது எல்லாவற்றிலும் அடியிலுள்ள எந்திரத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறதாம். இந்த இரும்புகம்பியைத் திருப்ப இரண்டு பக்கங்களிலும் முள்ளைப்போல் பித்தளைக்கம்பிகள் வைத்த சலாகை ஒன்று அதில் பொருந்தியிருக்கிறது. யந்திரத்தில் நெருப்புப் போட்டு ஆவி உண்டு பண்ணினபிறகு இந்த சுக்கானைப் பிடித்துத் திருப்பினால் உடனே கப்பல் ஓடுமாம். இந்தச் சுக்கான் சக்கிரத்தை இரண்டு பாதிகளாக நினைத்துக் கொள்ளலா மல்லவா; இதின் ஒரு பாதி

யில் இந்த சலாகையைத் திருப்பினல் முன் பக்கமாவும். இன்னொரு பாதியில் இதைத்திருப்பினல் பின்பக்கமாகவும் கப்பல் ஓடுமாம். இந்த ஒவ்வொரு பாதியையும் அனேக பாகங்களாகப்பிரித்து அடையாளம் செய்திருக்கிறர்கள். அதுமேல் இவ்வளவுதூரம் திருப்பினல் மெதுவாகவும் இவ்வளவுதூரம் திருப்பினல் அரை வேகமாகவும், இவ்வளவுதூரம் திருப்பினல் முக்கால் வேகமாகவும், இவ்வளவு தூரம் திருப்பினல் முழு வேகமாகவும் ஓடும் என்றும், இப்படித் திருப்பினுல் நின்றுவிடு மென்றும் குறிக்கப்பட்டிருக்கிறது. அவ்வளவு பெரிய கப்பல் இந்த ஒரு முள்ளைத்திருப்புவதால் சொன்னபடியாடு மென்று சொல்லக் கேட்க நாங்கள் மிகவும் அதிசயப்பட்டோம். இது கப்பல் ஓடுகிற விதம். கப்பலிலுள்ளவர்களுக்கு கப்பல் ஓடுவதிலுள்ள வித்தியாசங்கள் தெரியாதாகையால் அவர்கள் பார்த்து தெரிந்து கொள்வதற்காக கப்பலில் இரண்டாந் தட்டில் பெரிய கடியாரம்போல் ஒன்று வைக்கப்பட்டிருக்கிறது. அதினுடைய வட்டமான பீங்கான் முகப்புத் தகட்டில் முன்பக்கம் பின்பக்கம்போகிறதை காட்டியிருப்பதோடு இரண்டு பாதிகளிலும், 'நிற்கிறது' 'கால் வேகம்' 'அரைவேகம்' 'முக்கால் வேகம்' 'முழு வேகம்' என்று புள்ளி குறித்து எழுதப் பட்டிருக்கிறது. அதிலே கெடியார முள்ளைப்போல் பெரிதாயிருக்கிற முள்ளானது மேலே யுள்ள சுக்கானைத் திருப்புவதற்குச் சரியாகத்தானும் திரும்புகிறதால் மேலே சுக்கான் முள்ளு முன் பக்கம் போகிற பாதியில் இருக்கிறதும் பின்பக்கம் போகிற பாதியில் இருக்கிறதும் இந்த ஒவ்வொன்றிலும் இன்ன வேகத்தில் போகிறதாக வைத்திருக்கிறதும், அல்லது நிற்கிற அடையாளத்திற்கும், அதே மாதிரியாக இதிலும் கடியாரம் மணி காட்டுவது போல் காட்டப்பட்டிருக்கிறது. இது பெரிய வியாபாரக் கப்பல்.

இந்த மாதிரியான சண்டைகப்பலில் பெரிய பீரங்கிகளும் அனேக சிறிய துப்பாக்கிகளும், கத்திகளும் இருக்குமாம். அதிலே ஒரு புதுமாதிரி பீரங்கி செய்திருக்கிறர்களாம். அதுசத்துருக்கள் கப்பல்களை உடைத்து விடுகிறதற்காம். ஏதோ உள்ளே ஒரு விசைவைத்த இரும்பு அம்மிக்குழவிகள் போன்றதுகளை இந்தப் பெரியவாய்களை 'ஆ'வென்று திறந்துக்கொண்டிருக்கும் பீரங்கிகளில் போட்டு மருந்தும் போட்டு கெட்டித்து தூரத்திலிருக்கும் சத்துருக்கள் கப்பலைப்பார்த்து சுட்டால் இந்தக் குழவி தண்ணீரினுள்ளாகவே குறிப்பிட்ட தூரம் போய் மேலே கிளம்பி எதிரிகப்பலில் தட்டின உடன், படார் என்று வெடித்து கப்பலை சின்னபின்னமாக்கி விடுமாம். இந்தக் குழவிகளில் போக வேண்டிய மயில் தூரத்துக் குள்ளபடி வேறு வேறு இருக்கின்றன. அந்த பீரங்கியை வேண்டியபடி எந்தப்பக்கம் வேணுமானுலும் திருப்பலாமாம். மேலே, கீழே, வேண்டியபடி லாகவமாக சாய்த்து வைத்துக்கொள்ளலாமாம்.

சத்துருக்கள் கப்பல் பகலில்தான் வெளிச்சத்தில் தெரிந்து விடுகிறது. இரவில் இருட்டில் எவ்விதமாக அதைத் தெரியப்படுத்தலாம்? என்றுகேட்டால், அதற்கு ஒரு ஏற்பாடு இருக்கிறது. இது வெகு அதிசயமானது. இந்நாளில் தந்தி பேசுகிறர்களே அதற்கு ஆதாரமாக உள்ள மின்சார வேகத்தை திராவகங்களால் உண்டாக்கி ஒரு பெரிய விளக்குக் கூட்டினுள் கம்பிகள் வழியாகக் கொண்டுவந்து விட்டிருக்கிறர்கள். இதைக் கொளுத்தினல் 40, 50-மயில் தூரத்துக்கு வெளிச்சத்தை எறிந்து அவ்வளவு தூரத்துக்கு அப்பால் இருக்கும் சிறு சாமான்களையும் தன் வெளிச்சத்தில் தெரிவிக்குமாம். இதின் வெளிச்சத்தை நாலுபக்கங்களும் விட்டுக் கொண்டே தூரத்துப்பார்வைக் கண்ணாடிக் குழாய்வழியாக அந்த வெளிச்சம் படுமிடங்களில் பார்துக் கொண்டு வந்தால் "இராவேளையில் நம்மூர்களில் போலீஸ் ஜவான் தன்கையில் வைத்திருக்கும் 'லாந்

தர்' வெளிச்சத்தை தூரத்திலிருக்கும் திருடன்மேல் அடிக்கச்செய்து அவனைக்கண்டு பிடிக்கிறதுபோல இவர்கள் எதிரிகப்பல்களையும் கண்டுபிடித்து விடலாமாம். இது எலக்ட்ரிக் விளக்கு. இதற்கு எண்ணெயும் கிடையாது; திரியும் கிடையாது. தூரதிருஷ்டிக் கண்ணாடிக்குழாய் வழியாகப்பார்த்தேன். துறைமுகத்தினுள் நிற்கும் கப்பலிலிருக்கும் எனக்கு சுமார் இரண்டு மைலுக்கப்பாலிருக்கும் சென்னை கோட்டையில் இருக்கும் கோபுர கடியாரத்தில் காட்டப்படும் மணி கைநீளத்துக் கப்பால் தெரிகிறது போல் தெரிந்தது. வெகு சுத்தமாகத் தெரிந்தது.

நடுசமுத்திரத்தில் சூரிய சந்திர னில்லாத வேளையில் என்னமாக திக்குத்தெரியும்? இவை உள்ளபோதும்கூட தெரிகிறது கஷ்டத்திலிருக்கிறதே! நக்ஷத்திரங்களைக் கொண்டு அறியலாம். ஆனால் இவைகள் தெரியாமலிருக்கும் சமயங்கள் அனேகம். இப்படியிருக்க திசையறிய வெகு யுக்தியான மார்க்கம் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஒரு கடுதாசியில் கிழக்கு மேற்கு முதலியவைவயும் இதற்கு நடுவிலுள்ள மற்ற திக்குகளையும், குறித்து இதின் நடுவில் ஒரு கெடியாரமுள்ளைப்போலேயிருக்கும் காந்தஊசியொன்றை நிறுத்தி இருக்கிறார்கள். இதுபடுக்கையிலிருக்கிறது. கப்பல் எந்தத் திசைபோனாலும் இந்தஊசிமுள்ளு வடக்கேதான் பார்த்துக்கொண்டிருக்குமாம். இதுகாந்தஊசியின்கட்டுப்பாடாம்! வடக்குத்தெரிந்ததானால், வடக்குமுகமாக நின்றால் வலதுபக்கம் கிழக்கு அல்லவா? இனி நாலுதிசைகளும் தெரிந்துவிட்டன: வெகு லேசு; கப்பல் தண்ணீரில் ஆடுமாகையால் இந்த திசையறிவிக்கும் நுட்பமான கருவி சாய்ந்துவிடு மென்றே இதைக் கம்பிகளினால் இலகுவாக கட்டித் தொங்கவிட்டிருக்கிறார்கள். இந்தக்கப்பலில் தண்ணீர்க்கஷ்டமில்லை; ஆனால் நாலுபக்கமும் சமுத்திரம்தானே, ஜலம் நிரம்பத்தா னென்று இல்லை. குடிக்கிறதற்கு உப்புத்தண்ணீர் உபயோகமாகுமா? அதற்குஇவர்கள் என்ன செய்கிறார்கள் என்றால், உப்பு ஜலத்தை நீராவியாகக் காய்ச்சி அந்த நீராவியைக் குளிரச் செய்து தண்ணீராக்கி அதைக் குடிக்கிறார்கள். உடம்புக்கு வெகு நல்லதுதான்: ஆனால் மண்சம்பந்த மில்லாததினால் ருசி இருக்காது.

கப்பலில் ஆஸ்பத்திரி இருக்கிறது; டாக்டர் இருக்கிறார்.

சமையல் இடமெல்லாம் எனக்கு வெகு அசுத்தம்போல் தோற்றிற்று. மாம்சங்கள்தான் முழுமையும்; அப்படியே நெய்யில்பொரித்து விடுகிறார்கள். பார்க்க வெகு குரூரமாக இருந்தது. மற்றப்படி அவர்கள் உட்காரும் இடங்கள்படுக்கும் இடங்கள் வெகு சுத்தமாக விருந்தன. அங்கே கப்பல் தலைவன் இருக்கும் அறைதான் வெகுஅபூர்வமாக இருந்தது. மேஜைகள், நாற்காலிகள், ஸோபாக்கள் விளக்குகள், வெகு நேர்த்தியாக இருந்தன. ஸாமான்கள் எவ்வளவு அழகாயிருந்த போதிலும் அவைகளை வைக்கிற ஏற்பாடு நன்றாயிருந்தால்தான் பார்க்க ரம்மியமாயிருக்கும்; இந்த ஏற்பாடு வெள்ளைக்காரர்களுக்குள்தான் வெகு சீர்திருத்த மடைந்திருக்கிறது. அங்கே படிக்க அனேக புஸ்தகங்களும் சமாசாரப் பத்திரிகைகளும் இருந்தன. கப்பலுக்குள் காற்று வரவேண்டியதற்காக வெளியிலிருந்து குழாய்கள் பெரிய திறந்தவாய்களுடன் காற்றுப்பக்கமாய்த் திருப்பி வைக்கப்பட்டிருக்கின்றன. உள்ளே யந்திரங்களெல்லாம் வெகு சுத்தமாக வைக்கப் பட்டிருந்தன.

இவைகளை யெல்லாம் பார்க்க சுமார் 1-மணி நேரம் சென்றது. அக்கப்பலை விட்டுவர இஷ்டமில்லாமலே திரும்பி வந்தோம். அக்கப்பலுக்குள் தோணியைவிட்டு ஏறும்போதும் அக்கப்பலைவிட்டு தோணியில் இறங்கும்போதும் நாங்கள் சாக்கிரதையாக ஏறி இறங்குகிறோமா

என்று ஒருவர் அக்கறை எடுத்துக் கொண்டு பார்த்துக் கொண்டிருந்தார்.

இப்பொழுது நான் பார்த்தகப்பல் ஒரு வியாபாரக்கப்பல். இதில் சமான்களையும், ஜனங்களையும் பணத்துக்கு ஏற்றிக்கொண்டு போகிறார்கள். பெரிய மூட்டைகளை சுளுவாய் ஏற்றியிறக்குகிறதைப் பார்த்தேன். இந்தக் கப்பல் எங்களில் ஒருவர் முன்பார்த்த சண்டைக் கப்பலைப்போல் அவ்வளவு சுத்தமாகவும் நேர்த்தியாகவும் இல்லை யென்றார். இதில் ஆடு, கோழி, வாத்து, இவைகள் வளர்த்து வருகிறார்கள். கடலில் காத்து ஜாஸ்த்தியாக இருக்கிறதா? கம்மியா? புசல் வரும்போல் உள்ளதா? சரியான காற்றுதானு? என்று அறியும் ஒரு கருவி இதில் புதிதாகப் பார்த்தோம்.

———:0:———

## A song of Life.
## கீர்த்தனம்.

### வாழ்வு.

இராகம் வேகடை — தாளம் ரூபகச்சாப்பு.

பல்லவி.

வாழ்வென்பதென்ன ஓர்மாயமென்றெண்ணி
மதியிழந்தாய்-நெஞ்சமே-நீஉய்யுமோர்
கதியிழந்தாய்-நெஞ்சமே-சும்மாஉன்றன்
விதியைநொந்தாய்-நெஞ்சமே.

அனுபல்லவி.

வாழ்வென்பதீசன்செய் மாவிந்த்ரஜாலமோ
ஏழைக்கூத்துப்பார்க்க அவர்க்கென்னசீலமோ—
[வாழ்வென்ப]

சரணங்கள்.

வாழ் வென்பது நமக்கீந்த பெருமாஸ்தி
வம்பாயிழந்தால் அதியும் பலன் நாஸ்தி
சூழும்பொருள் சொப்பனமென்று தள்ளாதே
சோம்பலும் டம்பமும் தோழமை கொள்ளாதே—
[வாழ்வென்ப]

வாழ்வென்பது நமக்கீந்தஓர்வெள்ளேடு
வம்பாய்க்கிறுக்கினல் வந்ததுனக்குக்கேடு
ஆழித்துரும்பென அவலமாய்த் திரியாதே
அறநெறிநிலையென்று மதைவிட்டுப் பிரியாதே—
[வாழ்வென்ப]

வாழ் வென்பது பலநாள் கொண்ட பாத்திரம்
மண்ணளந்தால் மண்கிடைக்கும் அம்மாத்திரம்
நாழிஅளந்தநொன்று தாழிகொண்டதொன்றுமோ
நன்றல்லாததுசெய்யின் என்று மதுநன்றாமோ—
[வாழ்வென்ப]

வாழ்வென்பது நமக் கிரவல்கிடைத்த நிலம்
வருந்தியுழுதாலன்றிக் கொடுக்குமோ அதுபலம்
ஊழ்வினையைநொந்து தாழ்மதிநண்ணுதே
உள்ளங்கைக்கிளிவிட்டு ஒளிந்தகிளியெண்ணுதே—
[வாழ்வென்ப]

### விதி.

விதிவிதியென்று நாள்வீணுக்கழித்தே
ஒதிபோலிருக்கும் உணர்வற்றமாந்தர்காள்
விதியென்பதென்ன மதியெனபதென்ன
மதியால்மதித்திரோ இதுகாறுமையோ.

மன்னுமிவ்வுலகிலே மானிடர்வாழ்விலே
முன்னைநாள்தொட்டே முயல்கின்றசக்தி'ரண்டு
அன்னவைவிதிமதியென்பர் அவ்'ரண்டுமே
பின்னிடுங்கயிறுபோல் வாழ்வினைப்பின்னுமே.

இவ்விருசக்தியில் அவ்விதிமுந்தியே
நவ்விமுன்முதுமைபின் வருவதுபோலவே
வெளவியேவந்தது பின்மதிசேர்ந்திடச்
செவ்வியும், செல்வமும், சீரும்பிறந்ததே.

மதியதுபெருகவே விதியதுவிலகுமே
மதியதுதெரியவே இருளதுவிலகுமே
கதிமதி, கலைமதி, பொருள்மதி, புகழ்மதி
விதியெனும் இருளது விலகவேவிலகவே.

———:0:———

SHORT STORY.

## Slaves of Passion.—III

## ஜகமோகன தாஸர்கள்.—III

[ஒரு சிறுகதை]

"காணிஆசை கோடி கேடு"

மறுநாள் 10 மணிக்கு காரியதரிசி மார்ஸ்டன் துரைசானி தன்னுடைய யஜமான் ஜயதாஸோடு இரகஸியமான காரியங்கள் நடத்திக் கொண்டிருந்தாள். அவர் சொன்னதை யெல்லாம் குறித்துக்கொண்டு 'டைப்' செய்கிற யந்திரம் இருக்கும் அறைக்கு வந்தாள். அவள் முகம் ஒளிவிட்டெரிந்தது. ஏதோ சோடி பெறுமான ஒரு பெரிய ரகஸியம் தனக்குள் இருக்கிறது போல் காட்டினுள். அவளுக்குண்டான சந்தோஷத்தை யடக்குவது அவளுக்குக் கஷ்டமாயிருந்தது. அவளுக்குண்டான முகமலர்ச்சியில் முகம் ரோஜாப்பூப்போல் சிவந்துவிட்டது. 'டைப்' செய்கிற யந்திரத்தண்டை யுட்கார்ந்து கொண்டு அந்த இரகஸிய கடிதத்தை யெடுத்து வாசித்துப் பார்த்தாள். அவளுக்கு தேகம் புளகாங்கித்தது. 'சொக்குப் பொடிவைத்தது நன்ருகப் பலித்திருக்கிறது" என்று மேதா ரீவர்ஸ் தனக்குள் நினைத்துக் கொண்டு ஒன்றும் தெரியாதவள்போல் "இந்தப் பூனையும் பால்குடிக்குமா!" என்று தோன்றும்படித் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு சிந்தாக்கிராந்தளாய் உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

மிஸ் மேரி மார்ஸ்டன் நெட்டிபோல் நிமிர்ந்து மேஜைமுன் உட்கார்ந்து கொண்டு அக்கம்பக்கம் யாரிருக்கிறார்களென்று பார்த்தாள்.

"மிஸ் ரீவர்ஸ்! சற்று அடுத்த அறையில் போயிருக்கவேண்டும்!" என்ருள். "சரி!" யென்று மேதா ரீவர்ஸ் ஆபீஸை விட்டு வெளியில் போய்விட்டாள்.

"சனி தொலைந்தது; சங்கடந் தீர்ந்தது!" என்று நினைத்துக்கொண்டார் மார்ஸ்டன் துரைசானி. அந்தக் கடிதத்தை 'டைப்' செய்கையில் முதலில் எழுத்தைப் பார்த்துப் புத்தானை யமுத்தாமல் ஓசையைக் கவனித்துக் கொண்டே புத்தானை யமுத்தினுள்.

தந்தி சமாசாரம் அனுப்பத் தபாலாபீஸாக்காவது ரயில் ஆபீஸாக்காவது போனுல் அங்கேயுள்ள தந்தியடிக்கும் குமஸ்தா, பணத்தையும் தந்தியடிக்க வேண்டிய சமாசாரத்தையும், எழுதி வாங்கிக் கொண்டு தந்தியடிக்கிற யந்திரத்தினண்டை சென்று குமிழ்பதித்த ஒருபித்தளைப் பாளத்துண்டின்மேல் கையை வைத்துக்கொண்டு, 'டிக், டாக்' 'டிக்டிக்; டிக்டாக்டிக்' என்று தந்திக்கம்பி முணுமுணுப்பது போல் சத்தம் கேட்க குமிழைப்பிடித்துக் கொண்டு தந்தியடிக்கப் பார்த்திருக்கலாம். அதினுள்சூக்ஷமம் என்ன வென்ருல் ஒவ்வொரு எழுத்தையும் டாஷ், டாட் (—·) என்று சொல்லும் இரு வகை சப்தங்களைக் கொண்டு இன்ன இன்ன வெழுத்துக்கு இத்தனை டாஷ், டாட் என்ற சங்கேதப்படி அக்ஷரமாய் எழுத்துகளை முணுமுணு வென்று அடித்து விடுகிருன். இதேமாதிரி சப்தம் தந்திக்கம்பியின் மற்றொரு முனையிலிருக்கும் யந்திரத்தில் கேட்கிறது. அதைக் கொண்டு அந்தண்டைப் புறமிருப்பவன் ஒவ்வொரு எழுத்தா யெழுதிக் கொள்கிருன். இதற்கு "மோர்ஸ் கோட்" என்றுபேர். இந்த சங்கேத சப்தங்களைக் கண்டுபிடித்து அதைச் சேர்த்து ஒரு புத்தகமாய் போட்டவர்பேர் "மோர்ஸ்." அவர் கண்டுபிடித்து ஏற்படுத்தினதினுல் அவர் பேரால் வழங்குகிறது.

மிஸ் மார்ஸ்டன், அந்த முக்கியமான கடிதத்தை முறையாக டைப் செய்யுமுன் அதை எழுத்து எழுத்தாய்ப் பிரித்து தந்தியடிப்பது போல் டைப் யந்திரத்தில் அடித்தாள். அப்படி ஓசையின்பேரிலே கவனமாயிருந்ததினுல் அவளுக்கு எழுத்துகள் சரியாக விழாமல் சடிதம் தப்பும் தவறுமாயிருந்தது. அதைக்கிழித்துவிட்டு மறுபடியும் வேறு கடிதம் டைப் செய்யவேண்டி யிருந்தது.

இவள் இங்கே யிப்படி தந்திரம் செய்து ஜாலமடித்துக் கொண்டிருக்கையில் "மேதா ரீவர்ஸ்" அடுத்த ஆபிஸில் சென்று அங்கே அவளுக்கு வேலை யகப்படுமா? என்று விசாரிக்கப்போனுள். அவளுக்கு அங்கே வேலை கிடைக்கவில்லை யென்று நாம் சொல்லத் தேவையில்லை. ஆனுல் அன்று சாயங்காலம் 5½-மணியானதும் அவள் ஜயதாஸ் ஆபீஸில் நுழைந்து "என் வேலையை நான் முடித்துவிட்டேன்" என்ருள்.

"என்ன! குட்டு வெளியாகும் சூதைக் கண்டுபிடித்தாய்விட்டதா?" என்ருர் ஜயதாஸ்.

"ஆய்விட்டது" என்ருள் மேதாரீவர்ஸ். "அதற்குள்ளா! எப்படி? யாரது என்னை மோசஞ் செய்தது?" என்று ஆச்சரியப் பட்டுக் கேட்டார்.

"மோட்டார் போட்டுக்கொண்டு வாருங்கள்! போகும்போது சொல்கிறேன்! பொழுதுபோகுமுன் போய்த்திரும்பிவிடவேண்டும்." என்றாள்.

"எங்கே?" யென்றுகூடக் கேட்கவில்லை ஜயதாஸ். மேஜையிலிருந்த மணியை ஓங்கி யடித்தார். உடனே ஆபீஸ் பையனான குள்ளன் கிட்ட வந்து நின்றான்.

"மோட்டார் தயாராயிருக்கிறதா? இல்லாவிட்டால் ஐந்து நிமிஷம்! தயார்" என்றார்.

சிட்டுக்குருவிபோல் குள்ளப்பையன் ஒரு எட்டாய் ஓடி வாசலில் மோட்டார் தயாராயிருக்கிறதா என்று தெரிந்துகொண்டு அடுத்த நிமிஷம் யஜமான்முன் வந்து நின்றான்.

ஜயதாஸ் பேசிக்கொண்டே அவனை கடைக் கண்ணால் பார்த்தார்.

கைகட்டி வாய்பொத்திக்கொண்டு குள்ளன் 'தயார்!' என்றான்.

ஜயதாஸ் "போகலாம் வா!" என்று எழுந்தார்.

இருவரும் பேசிக்கொண்டே வாசலில் வந்து மோடாரில் ஏறிக்கொண்டார்கள்.

"அவள்தான் என்று உனக்கு என்னமாக நிச்சயமாகத் தெரியும்?" என்று கேட்டுக்கொண்டே ஜயதாஸ் மோடார் ரதத்தில் ஏறினார்.

"ஏறி உட்காருங்கள்! நானும் உட்கார்ந்துகொண்டு சொல்கிறேன்!" என்று பிரதியுத்தரம் பிறந்தது.

"கடகடகடகடகட— —" மோடார் யந்திரத்தை சுழற்றினான். "கிடுகிடுகிடுகிடுகிடு— —" என்று கிடுகிடுத்த சப்தத்துடன் அது நகரத் தொடங்கியது.

"கடற்கரை மார்க்கமாய் வேப்பேரிக்குப் போ!" என்றார் ஜயதாஸ்.

மேதா ரீவர்ஸ் தன்உடுப்புப்பையில் கையிட்டு அவர் அதி முக்கியமென்று சொன்ன கடிதத்தின் கிழிந்த துண்டுகளை ஒட்ட வைத்து—"இதுதானா உங்கள் இரகஸியம்?"—என்று கேட்டாள்.

ஜயதாஸ் மதிமயங்கி "ஆம்! இதுதான்." என்றார்.

"உங்கள் இரகஸியம் உடனே வெளியாய் விட்டது. இதற்குள் காரியம் முடிந்து—ஆளும் முழுகிப் போயிருப்பான்—நீங்கள் எழுதினதுமட்டும் நான் சொன்னபடி யிருந்தால்" என்றாள்.

"ஐயோ! இதை நம்பினவன் கதி அதோகதிதான்! அவன் குடிபாழ்த்தது—ஆளும் அடியோடு முழுகிப் போனான்—யாரது?" என்று ஆச்சரியமும் அவசரமுமாய்க் கேட்டார்.

"எல்லாம் அவள்தான்?" என்றாள்,

"அடிபாவி! நான் அவளை எவ்வளவு நம்பியிருந்தேன்! எவ்வளவு மேலாக வைக்க நினைத்திருந்தேன். அவள் கொடுத்துவைத்தது அவ்வளவுதான்!" என்று வருத்தமும் விசனமுமாகச் சொன்னார்.

"இப்பொழுது அவளை நீர் உடனே நீக்கி விடவேண்டும்—இல்லாவிட்டால் மோசம்வரும். அவள் தொலைந்தது நல்லதாய்விட்டது!"

"இதோ இப்பொழுதே அவளுக்கு வேலை போய் விட்டதென்று சொல்லிவிடுகிறேன்: அந்தப்பயலும் அவளோடு சேர்ந்துகொண்டு எனக்குச் சதியிழைத்தான் பார்த்தையா! அதை நினைக்கத்தான் எனக்கு துக்கமும் வெட்கமும் அடக்கமுடியாமல் வருகிறது."

"எந்தப் பயல்?"

"அவன் பேரையும் நான் சொல்லவேண்டுமா?"

'நீங்கள் யாரைக் குறிக்கிறீர்களென்று எனக்குத் தெரியவில்லையே!"

"யாரைக் குறிக்கப்போகிறேன்! அந்தப்பயல் மோஹனம்தான்—தம்பி யென்றல்லவோ இருந்தேன்!"

"மோஹனதாஸ் பேரிலா உங்களுக்கு சமுசயம்!"

"பின்னை? யாரது? எந்தப்பயலுக்காக அவள் என்னை யிப்படி மோசம்செய்து காட்டிக்கொடுத்தாள்? பெண்ணென்றல்லவோநினைத்தேன்! அவள் பேயாட்டம் ஆடினதை இப்பொழுதல்லவோதெரிந்துகொண்டேன்! இருக்கட்டும்!" என்று ஜயதாஸ் கருவிக்கொண்டிருக்கையிலே மோடார்கார் பட்டென்று நின்றது.

ஜயதாஸும் மேதா ரீவர்ஸும் சரேலென்று இரதத்தை விட்டிறங்கி மிஸ் மார்ஸ்டன் வீட்டிற்குள் நுழைந்தார்கள். மோஹனதாஸ் அவருக்கு முந்தி யங்கே போயிருந்தார். எல்லாரும்தாழ்வாரத்தில் கூடினார்கள்.

"மிஸ் மார்ஸ்டன்! உன்னை நான் வேலையினின்று நீக்கிவிட்டேன். ஒரு மாசமுன் நான் இங்கேவந்து

உன்னை விரும்பி ஏராளமான சம்பளம் கொடுத்து அழைத்துக்கொண்டு போனேன்: உன்னை நம்பி நம்பிக்கை ஸ்தானத்தில் வைத்தேன். நீ மட்டும் நம்பிக்கைமோசம் செய்யாமலிருந்தால் நீ யென்ன கேட்டாலும் கொடுத்திருப்பேன். உன்னை உயர்ந்த ஸ்திதிக்குக் கொண்டுவரப்பார்த்தேன்! உன் தலைவிதி என்னைக் காட்டிக்கொடுக்கும்படி உன்னைத் தூண்டிற்று. அதுவுமல்லாமல் உன்னையடுத்து என்னைக் கெடுத்தவன் இதோ இருக்கிறான். இனி ——"

"ஜயதாஸ்! வாயைமூடும்! மோஹனதாஸ் பேரில் பிசகில்லை யென்றுதான் நான் சொன்னேனே!"

"பிசகில்லையா? நீ சொல்வது எனக்கு அர்த்தமாகவில்லை!"

"நீர் சும்மா இரும்! நான் சொல்கிறேன்!" என்று மிஸ் ரீவர்ஸ் பேசத் தொடங்கினாள்.

"மிஸ் மார்ஸ்டன்! உன்னுடைய சமர்த்தையெல்லாம் நாங்கள் கண்டு பிடித்துவிட்டோம்!—தந்தியடிக்கிறமுறை—காது கொடுக்கிற இரகஸியம்—எல்லாம் வெளியாகி விட்டது! ஐயோ! முகம் வெளுத்துப் போகிறது பாவம்! குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும்தான்! முகம் வெளுக்காதா? வெளுக்கும்! வெளுத்து என்னசெய்கிறது! நீ விதைத்த வினையை நீயே அனுபவி! யார் என்ன செய்யலாம்! உன்னை நம்பினவனை நீ கெடுத்ததன்றி அண்ணனுக்குத் தம்பியாகாதபடி அவர்களுக்குள் கலகமும் உண்டுபண்ணிவைத்தாய். இப்பொழுது "இங்கும் கெட்டு அங்கும் கெட்டு அகப்பட்டுக் கொண்டாரே கும்மட்டிபட்டர்!" என்கிற கதையாக இருவர் மனஸ்தாபத்துக்கும் ஆளாகி உன்பாடும் அந்தரமாய்விட்டது! உன்னை நேசித்த ஆசைமணாளனும் நீயுமாகச் சந்தோஷமாயிருப்பீர்களென்று நினைக்கிறேன்!" என்று அவளை நோக்கி பரிதாபமாய் உதட்டைப் பிதுக்கிகொண்டு பார்த்தாள்.

"அவள் ஆசைமணாளன் யார்?" என்று ஜயதாஸ் மருள மருள விழித்தார்.

"அவன் மோஹனதாஸ் என்று நீர் நினைக்கிறீர். அப்படி யொன்றுமில்லை. அவள் இருவர் தலையிலும் சமமாக சொட்டு வைத்துவிட்டு அவள் ஆசைவைத்த அவளினத்தானோடு கூடிவாழ நினைத்திருந்தாள். அவளொன்று நினைக்க தெய்வமொன்று நினைத்தது! பாவம்!" என்று பின்னும் பரிதாப முகத்தோடு அவளை விழித்துப்பார்த்தாள்.

ஜயதாஸ் ஒன்றும் புரியாமல் பின்னும் மருள மருள விழித்தார்.

"ஐயா! இன்னம் உங்களுக்குப் புரியவில்லையா? அவள் உம்மையும் நேசிக்கவில்லை! உமது தம்பியையும் நேசிக்கவில்லை! உங்களிருவருக்கும் ஆசைகாட்டி மோசம் செய்துவிட்டு கடைசியில் ஜகப்புராளன் ஜேம்ஸோடு சுகித்துவாழ நினைத்திருந்தாள். ஜகப்புராளன் இனி சிறு புழுவாய் நெளிந்து புரளவேண்டியது தான். நான் பக்கத்து ஆபீஸில் வேலை யகப்படுமா? என்று விசாரிக்கப் போகிற வியாஜத்தில் அங்கிருந்து பார்த்துக்கொண்டிருந்தேன். உம்முடைய கடிதத்தை டைப் செய்கிற யந்திரத்தில் தந்தி யடிக்கிற மாதிரி இவள் அதை யடித்து தந்தி கொடுத்துக் கொண்டிருந்தபோது ஜகப்புராளன் ஜன்னல் பக்கத்திலிருந்து அதை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தான். உங்களை ஏமாற்றினதெல்லாம் அவன்தான். இப்பொழுது தன் ஆசைக்கண்ணாட்டி மூலமாகத்தானே அவன் ஏமாந்து போனான். நீங்கள் சொன்னபடி அவன் ஏற்கனவே நடந்திருப்பான். அப்படியானால் அவன் முழுகிப் போனான் என்பதில் சந்தேகமில்லை"!

"ஏனம்மா! அவன் உன் ஆசை நேசன் அல்லவா?" என்று மிஸ் மார்ஸ்டன் முகத்தை உற்றுப் பார்த்தாள்.

அவள் தலையை அசைத்தாள். வெட்கமும் துக்கமும் அவளைப் பிசாசு பிடித்ததுபோல் பிடித்துக் கொண்டு ஆட்டியது!

மிஸ் மார்ஸ்டன் பொறுத்துப் பார்த்தாள்—பொறுக்கக் கூடவில்லை. அடக்கிப்பார்த்தாள்—அடக்கக் கூடவில்லை. கடைசியில் அவள் ஹோ! வென்று கதறிக்கொண்டு உள்ளதை யுள்ளபடி சொல்லிவிட்டாள்.

அவளுக்கு நல்லுடையில் தீராத மோகம் பிறந்தது. அந்த ஆசையைத் தீர்த்துக்கொள்ள ஜேம்ஸிடம் பணமில்லை. ஆகையால் அவன் பணம் சேர்த்து பணக்காரனாகட்டுமென்று காத்துக்கொண்டிருந்தாள். அந்த சமயத்தில் ஜயதாஸ் அவளுக்கு காசிப்பட்டு வாங்கிவந்து கொடுத்தார். அது அவள் ஆசையைப் பெருக்கிற்று. சீக்கிரத்தில் பணக்காரனாகிற

வழி யென்னவென்று அவளும் அவள் ஆசைநாய கனும் ஆனமட்டும் யோசித்தும் ஒன்றும் தோன்ற வில்லை. திடீரென்று ஜயதாஸ் வந்து அவளுக்கு வேலையளித்தது தெய்வானுகூலம்போல் தோன் றிற்று. ஆனல் ஆசை வெட்கமறியாது என்பது போல், அவளுக்கு ஜேம்ஸிடம் ஆசையிருந்தபடியால் தன்னை நம்பிய ஆடவனொருவனை மோசம் செய்யத் துணிந்ததன்றி மற்றொருவரை ஏமாற்றி வந்தது பிச கென்று தோன்றவில்லை. மணவாசையிலும் பண வாசை பெரிதாகையால், பணம் சேரச்சேர இன்னும் சேர்க்க வேண்டுமென்று தோன்றியது. அது கடை சியில் அவளை அந்தரத்தில் விட்டதுமன்றி ஜகப்புர ளன் ஜேம்ஸையும் அதோகதி யாக்கிவிட்டது. "முற் பகல் விதைக்கில் பிற்பகல் விளையும்" என்பது நிஜ மாகப் பலித்தது.

"நீங்களிருவரும் இவளை விட்டுத் தொலைக்க சேர் ந்தது உங்களுடைய நல்லகாலம் தான்—அவளும் ஜக ப்புரளன் ஜேம்ஸை விட்டுத் தொலைக்க நேரும். அது வும் நல்லதுதான். ஏனெனில் இன்று ராத்திரி அவன் கடனில் மூழ்கி உருப்படாமல் நாசமானன் என்பது திண்ண மென்று கொள்ளுங்கள். அவன் ஏற்கன வே அக்கடிதத்தில் கண்டபடி நடந்திருப்பான்."

மிஸ் மார்ஸ்டன் இதைக் கேட்டதும் இடியேறுண் ட நாகம்போல் திகைத்து நின்ருள்.

"உன் சமர்த்தில் சோற்றைக் கரைத்துவிட்டோம்! அது பலிக்காமற் போய்விட்டது. போ!" என்ருள்.

"ஐயோ!" என்று சொல்லி குமரிக்கொண்டு குப் புற விழுந்தாள் மிஸ் மார்ஸ்டன்.

"தன்வினை தன்னைச் சுடும்! நீ அப்படித்தா னேகிட!" வென்று சொல்லிக்கொண்டு மேதா ரீவ ர்ஸ் ஜயதாஸ் மோஹனதாஸ் இருவர்களையும் அழை த்துக்கொண்டு போய்விட்டாள்.

போகும் பொழுது மூவரும் ஒரு வண்டியில் ஏறிச் சென்ருர்கள்.

"பார்த்தீர்களா! இந்தச் சிறுக்கி செய்த ஜாலத்தை! உங்களிருவரையும் நேசிப்பவள் போல் ஆசை காட்டி மோசம் செய்து உங்கள் குடியைக் கெடுத்துத் தான் பிழைக்கப் பார்த்தாள்! தெய்வம் அவளுக்கு நன்ரு கக் கூலி கொடுத்தது!" என்ருர்.

"கடைசியில் ஒரு வார்த்தை: அவள் எப்படியாவது போகிருள்! ல் லாம் "சுபமஸ்து" என்று நீங்கள் சொல்லுகிறபடி நல்லதாகவே முடிந்தது. நீங்களிரு வரும் பேதப்பட்டிருந்தது போக, அவள் வந்து உங்க ளிருவரையும் ஒன்றுசேரக் கூட்டி வைத்தாளே! அதுவே நலமாயிற்று! இனி நீங்கள் ஒருவரை யொ ருவர் பேதித்துச் சமுசயித்துக் கிடங்கொடாதீர்கள். அதுதான் உங்களுக்கு தெய்வம் போதிக்கவந்த நற் போதனையென்று கொள்ளுங்கள்" என்ருள்.

ஜயதாஸ் சிந்தை நொந்தவரா யிருந்தும் மனம் தேறினவராய்,

"தெய்வம் இன்னொரு நன்மையும் எங்களுக் களித் தது. இந்தப் பிடாரியினிடமிருந்து எங்களைத் தப் பும்படி காப்பாற்றினதன்றி உன்னுடைய நேசம் எங்களிருவருக்கும் கிடைக்கும்படி செய்ததே அது வே பெரிது!" என்று சொல்லி கண்ணை மூடிக்கொ ண்டு கைகூப்பித் தன் இஷ்டதேவதையை மனதாறத் தொழுது சிந்தித்தார். பெண் ஆசை யொழிந்தா லும் பெண்ணுடே சல்லாபமாய் உட்கார்ந்து பேசிக்கொண்டு போகவேண்டு மென்கிற தன் மனோத பீடேறினதற்காக அவர் உள்ளத்தில் மகிழ்ந்தார். மனிதன் உண்மையாக இச்சிக்கும் எதுவும் வீண்போவதில்லை. தன்னை மறந்து சக்தி யிழந்து திருட்டுத்தனமாய் தவிப்பதால் தான் இடறி விழுந்துகொண்டு போகவேண்டி யிருக்கிறது. இஷ் டதேவதை யுபாஸனை யிருந்தால் எப்படிப்பட்ட தீமையும் நன்மையாக மாறிவிடும் என்று அவர் தன் தம்பிக்கு வற்புறுத்திக் கூறினர்.

முற்றும். C. V. S.

---

## How to Manufacture Needles.

### ஊசிகள் செய்யும்வகை.

:++:

நாகரீகம் அதிகரித்த இக்காலத்தில் வேலை செய்யும் மாதிரியும் தொழில் செய்யும் வகை யும் விசேஷ மாறுதல்க ளடைந்திருக்கின்றன. முன்காலத்தில் ஒரு வஸ்துசெய்யும் தொழி லாளி அவ்வஸ்துவை இயற்கைப்பொருளினி ன்றும் வேண்டிய செயற்கைப்பொருளாக மா ற்றுவதற்கான பல வேறுபட்ட செய்கைகளையு ம் தானே செய்து வந்தான். உதாரணமாக, ஒரு துணி நெய்ய வேணுமென்ருல் பருத்தி

யைக் கொட்டை யெடுத்து நூல் நூற்று நெசவுநெய்து துணியாக்கும் வரையில் ஆகவேண்டிய பலவேறுபட்ட வேலைகளையும் ஒரு தொழிலாளியே ஒன்றின்பின் ஒன்றாகச் செய்து வந்தான். இதனால் அவன் பலவிதத்தில் கை பழகினவனாக இருக்கவேண்டிய கஷ்டத்தேர்டு ஒரு வேலையைவிட்டு ஒரு வேலைக்கு அவன் மாறவேண்டிய அவசியத்தால் நேரும் கால நஷ்டமும் அவன் துரிதமாகத் துணிகள் செய்து முடிப்பதற்கு இடையூறாக இருந்தது. நாகரீகம் அதிகமாக ஆக செய்முறைகளெல்லாம் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொருபிரிவையும் ஒருவன் விடாமற் செய்து வர இப்படி பல பிரிவுகளையும் பலர் அதேவேலையாகச் செய்து வருவதனால் ஒவ்வொருவனும் அவன் செய்துவரும் ஒரேவேலையில் அதிகக் கைப்பழக்கமுற்று தொழிலின் அந்தப் பாகத்தை நேர்த்தியாகவும் கைச்சுறுக்காகவும் செய்ய வல்லவனாகிறான். இப்படியே ஒவ்வொருவனும் ஒவ்வொரு செய்முறையில் வல்லவனாக இவர்களெல்லாருடைய வேலைப்பாடும் சேருவதால் வேலைமுடிந்த துணியோ வேறு சரக்கோ செய்தாகிறது. இப்படி செய்வதால் ஒரு பண்டம் செய்து முடிக்க வேண்டுமானால் பல வேலைக்காரர்களுடைய உதவியும் அவர்கள் ஒழுங்காய் வேலைசெய்ய வேண்டிய ரீதியும் இருக்கவேண்டியது. இந்த ஏற்பாட்டின் படி ஒரு துணி வேண்டுமென்றால் அதற்கு ஐந்தாறு தொழிலாளிகளுடைய உதவி வேண்டியதாகும்: அதனால் அந்த ஒரு துணியின்விலை ஒருவனே அந்தத்துணியை நெய்வதற்கான எல்லாவேலைகளையும் செய்வதால் எவ்வளவாகுமோ அதைவிட ஐந்தாறுமடங்கு அதிகமாயிருக்கும். ஆனால் ஒரே தொழிலாளி ஒரு துணி நெய்வதற்குப் பிடிக்குங் காலத்தை விட எவ்வளவோ சொற்பமான காலத்தில் பலர் சேர்ந்து செய்யப்படும் துணி நெய்தாய்விடும். ஒரு தொழிலாளி தானே ஒருவனாக ஒருதுணி நெய்து முடிக்கப் பிடிக்குங் காலமெல்லாம் அந்த ஒரு தொழிலைப் பலபிரிவுகளாகப் பிரித்துக் கொண்டு வேலைசெய்யு மிவர்கள் வேலைசெய்து வந்தால் இவர்கள் செய்து முடிக்கும் மொத்தத்துணிகளில் ஒரு துணியின் விலை சராசரியில் அந்த ஒரு துணியின் விலையைவிட எவ்வளவோ மலிவாக விருக்கக் காணப்படும். சரக்குகள் ஏராளமாகவும் துரிதமாகவும் செய்ய வேண்டின் அதற்குத் தொழிற் பிரிவினை யென்னும் இவ்வேற்பாட்டால் அதிகலாபமும் சாதகமுமுண்டு. இப்படி ஒரு பொருள் செய்யும் தொழில் நுட்பமான பலபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு சிறு பிரிவான வேலையும் ஒரு தொழிலாளியால் செய்யப்பட்டுவர, பல பிரிவுகளிலும் வேலைசெய்யும் தொழிலாளிகளின் வேலைகள் மிக அதிசயமான ஒழுங்குபாட்டின்படி ஒற்றுமையாக நடத்தப்பட்டு வருவதால் மொத்தத்தில் ஏராளமாக சரக்குகள் செய்து தள்ளப்படும். இதற்கு ஊசிகள் செய்யும் வகை ஒரு நல்ல உதாரணமாகும். நாம் தெருவிலும் கடையிலும் காசுக்கு ஐந்து, ஆறு என்று வாங்கும் ஊசிகள் இத்தேசத்திலிருந்து 6,000 மைல் தூரமுள்ள சமுத்திரத்துக் கப்பாலிருக்கும் வெள்ளைக்காரர் தேசமாகிய இங்கிலாந்தில் ஒவ்வொன்றும் சுமார் 150 வேலையாள்கள் கைமாறி எவ்வளவோ விலைபெற்ற யந்திரங்களின் உதவியால் செய்யப்பட்டு இத்தேசத்திற்குக் கொண்டுவந்து விற்கப்படுகின்றன. அப்படியிருந்தும் காசுக்கு ஐந்து, ஆறு என்று அவ்வளவு மலிவாக விருக்கிறது. இவ்விதமான ஊசியொன்று ஒரேவேலைக்காரனால் செய்யவேண்டுமானால் ஒரு வராகன் கொடுத்தாலும் செய்தாகுமோ என்னமோ சந்தேகந்தான். ஆனால் பெரிய கட்டடங்கள் கட்டி,விலை பெற்ற யந்திரங்களை வாங்கியமைத்து 150-வகையான வேலைக்காரர்களை யமர்த்தி வேலை செய்து வருவதால், ஒவ்வொரு வேலைக்காரனும் ஒரே வேலையை யடிக்கடி விடாமல் செய்து வருவதால்

அதில்மட்டும் கைபழகி ஒரு நொடியில் எவ்வளவோ கருக்காகவும் மிகவும் அதிசயமான சுறுசுறுப்போடும் அந்த வேலையைச் செய்துவருகின்றார்கள்: இப்படியேஒவ்வொரு உட்பிரிவு வேலையும் துரிதமாக நடக்க, மிகவும் அதிசயமான ஒற்றுமையும் ஒழுங்குபாடும் அவ்வேலைச்சாலையில் பரவியிருப்பதால் ஒருநாளில் லக்ஷம் கோடிக்கணக்கானஊசிகள் வெகுசுலபமாகச்செய்து தள்ளப்படுகின்றன. இப்படிச் செய்து தள்ளப்படும் ஊசிகளை இவ்வளவு மலிவாக விற்றும் அவ்விற்றுமுதல் மொத்தத்தில் இவ்வூசிகள் செய்வதற்காகப் பிடித்த அபரிமிதமான செலவுகளெல்லாம் கட்டிவந்து, வேலை நடத்திவர முதல் வைத்த வியாபாரிகள் முதலாளிகளுக்கு லாபமும் கிடைக்கத் தக்கதாயிருக்கிறது.

இப்பொழுது, நமக்கு மிக சாதாரணமானதும் சொற்பவிலையினால் மிக அற்பமாகத் தோற்றுவதுமான இந்த ஊசிகள் செய்யப்படும் வகையைப்பற்றிக் கொஞ்ச முரைப்போம்.

ஊசிகள் செய்யும் முறையைப்பற்றிச் சொல்லுமுன் எஃகு செய்யுமுறை கொஞ்சம் தெரிந்திருக்க வேண்டும். அதைப்பற்றி முந்தியே விவேக சிந்தாமணியில் சொல்லி யிருக்கிறது. ஊசிகள் செய்ய முதலாவது நல்ல முதல்தரமான எஃகு வேண்டும். அந்த எஃகினால் செய்யப்பட்ட கம்பியை ஊசி செய்வதற்கு எவ்வளவு மெல்லியதாகவேண்டுமோ அவ்வளவு மெல்லிதாக இழுத்து அதை ஒரு பெரிய உருளையில் சுமார் 50-சுற்றுச் சுற்றுவார்கள். அப்புறம் அந்தக் கம்பியை அப்படியே நேரெதிராக இரண்டிடத்தில் வெட்டுவார்கள். 50 சுருள்களையும் நேரெதிராக இரண்டிடத்தில் வெட்டுவதினால் சரி நீளமான 100 கம்பிகள் ஆகும். இந்தக்கம்பிகள் அனேக அடிகள் நீளமிருக்கும். இவைகளை நூறுநூறாகக்கட்டி, அந்தக் கட்டுகளை அப்படியே ஒரு பெரிய கத்தரியின் வாயில் கொடுத்து யந்திரத்தி னுதவியால் அக்கட்டுகளை இரண்டூசிகள் நீளமுள்ள துண்டுகளாக வெட்டுவார்கள். இப்படி வெட்டப்பட்ட துண்டுகள் வளைந்திருக்குமாகையால் அவைகளை இனி நேராகச் செய்யவேண்டும். அதற்காக அவைகளை கட்டுகளாகக் கட்டி அக்கட்டைச் சுற்றி இரண்டு இரும்பு வளையங்கள் மாட்டி மேலும் கீழுமாயுள்ள இரண்டு எஃகு தட்டுகளின் நடுவில் வைத்து மிகவும் பலமாயழுத்தி முன்னும் பின்னுமாய் உருட்டுவார்கள். அந்த எஃகு தட்டுகளில் கட்டுகளின்மேல் கட்டப்பட்ட இரும்பு வளயங்கள் முற்றும் பதியத் தக்கதாக மேலும் கீழும் இரண்டு வாய்க்கால்க ளிருக்கும். இரும்புத்துண்டுகளின் கட்டை வைத்தழுத்தும்போது அதைச் சுற்றியுள்ள இரும்பு வளயங்கள் எஃகு தட்டுகளிலுள்ள வாய்க்கால்களில் விழுந்துபோக, மேற்படி எஃகு தட்டுகள் அவைகளின் நடுவிலுள்ள ஊசிக்கம்பிகளை நன்றாக அழுத்தும். யந்திரத்தி னுதவியால் கம்பித்துண்டுகளை இவ்வாறு எஃகு தட்டுகளால் அழுத்தி முன்னும் பின்னுமாக உருட்டுவதினால் அந்தக் கம்பிகளெல்லாம் கோணுமல் நீங்கி முற்றும் நேராய்விடுகின்றன. பிறகு அந்தக் கம்பிகளை ஒருதடவைக்கு 10, 20, ஆக எடுத்துக்கொண்டு ஒரு சாணைக்கல்லில் பிடித்து அவைகளின் முனைகளைக் கூருக்குகிறார்கள். அக்கம்பிகளின் முனைகள் ஒரு தோலால் சாணைக்கல்லில் அழுத்தப்படுகின்றன; சாணைக்கல் சுற்றுகையில் கம்பிகளைக் கட்டைவிரலுக்கும் மற்ற விரலுக்கும் நடுவில் பிடித்துச் சுற்றித் திருப்பிக்கொண்டுவந்தால் ஒரு நொடிப் பொழுதில் கூராய்விடுகின்றன. இரண்டு பக்கங்களும் கூராகத் தீட்டப்பட்டபின் ஒரு அளவு கோலால் அந்தக்கம்பிகள் நடு மையத்தில் வெட்டி இரண்டாக்கப்படுகின்றன. பிறகு வெட்டப்பட்ட மழுங்கல் முனைகளை விசிரிபோல் கையில்விரித்து ஒருசிறிய பட்டடைக்கல்லில்வைத்து சிறிய சம்மட்டி யொன்றால் ஒரு தட்டுத்தட்ட அவை

கொஞ்சம் தட்டையாகப் போகின்றன. இப்படி தட்டுவதால் அந்த முனைகள் துளையிடுவதற்குக் கூடாத அவ்வளவு கடினமாக ஆய்விடுகின்றன. ஆகையால் அவைகளைச் சிவக்கக் காய்ச்சி மெல்ல ஆறவிடுவதால் மிருதுவாக்கப்படுகின்றன.

அப்புறம் அவை துளைக்கப்படுகின்றன. இது ஒன்றொன்றாகத்தான் செய்யப்பட வேண்டும். இந்தவேலை சிறு குழந்தைகளால் செய்யப் படுகின்றன. இதற்காக வேலைச் சாலைகளிலுள்ள குழந்தைகள் ஒரு முனை கூராகவும் ஒருமுனை தட்டையாகவும் செய்யப்பட்ட கம்பிகளை ஒன்றொன்றாக எடுத்து ஒரு ஈயக்கட்டையின் மேல் வைத்து ஓர் சிறிய தொளையிடு கருவியும் சுத்தியும் வைத்துக் கொண்டு துளையிடுகிறார்கள். பெரும் பான்மையான வேலைச்சாலைகளில் ஊசிக்கண் தமர்போட்டுத் துளைக்கப்படுகிறது. அப்படியானால் அதற்காக யந்தரத்தால் சுற்றப்படும் ஒரு சிறிய தமர் இருக்கிறது. அதன்முனையில் ஒவ்வொரு ஊசியை ஒரு க்ஷணப் பொழுது பிடித்தால் துளை செய்தாய் விடும். ஊசிக்கண்ணுக்குப் பக்கத்தில் அதில் நூல் கோர்ப்பதற்கு சாதகமாக வாய்க்கால் மாதிரி ஒரு சிறிய பள்ளமிருக்கிறதே, அது செய்ய ஒரு சிறிய அறமுண்டு; அதனால் ராவியாவது அல்லது அதற்காகவுள்ள ஒரு சிறிய யந்திரத்தில் வைத் தழுத்தியாவது இந்த வாய்க்காலுண்டுபண்ணுகிறார்கள். அதற்கப்புறம் ஊசியின் கண்ணுள்ள முனையைக் கொஞ்சம் தேய்த்து உருண்டையாக்கி விடுகிறார்கள். சில வேலைச்சாலைகளில் இரண்டுசி நீளமுள்ள கம்பிகளை இரண்டாகத் துண்டிக்கு முன் ஒரு யந்திரத்தில் வைத்து நடு மையத்தில் இரண்டு துளைகளும் வாய்க்கால்களும் செய்து அப்புறம் அதை அவ்விரு துளைகளுக்கு மத்தியில் வெட்டிஒரு ஊசிக்கு ஒரு துளையாகும்படி செய்கிறார்கள்.

இனி இந்த ஊசிகளை யெல்லாம் சரியான படி பதப்படுத்த வேண்டும். அதற்காக இந்த ஊசிகளை ஆயிரக்கணக்காக ஒரு இரும்புத்தட்டில் வைத்து அந்தகட்டைச் சிவக்கக் காய்ச்சி, அப்புறம் அந்த ஊசிகளை யெடுத்து திடீரென்று குளிர்ந்த தண்ணீரில் போடுகிறார்கள். இதனால் அவை மிகவும் கடினமாக ஆய்விடுகின்றன- அவைகளை சரியான பதத்திற்குக் கொண்டுவர அவைகளை மறுபடியும் உபாயமாகக் காய்ச்ச வேண்டி யிருக்கிறது. அதற்காக அவைகளைக் கொதிக்கும் எண்ணெயில் போட்டு நன்றாய்ச்சூடு கண்டபின் எடுக்கிறார்கள். இப்பொழுது ஊசி அதற்கு வேண்டிய கடினமும் பலமுமுடையதாக சரியான பதத்திற்கு வந்துவிட்டது. இனி அவைகளைத் தேய்த்து மெருகு கொடுக்க வேண்டும். இது தான் எல்லாவற்றினும் மிகச் சல்லியமான வேலை.-- இதற்காக ஊசிகளை லக்ஷம் லக்ஷமாகப் பிரித்துக்கட்டி அவைகளோடு குருந்தக்கல் பொடியும் (Emery powder) எண்ணெயும் சேர்த்துக் கலந்து அதற்காகவுள்ள ஒரு பலமான பையில் போட்டு, அப்பையை உருட்டும் போழுது ஊசிகளெல்லாம் நீட்டுப்போக்கில் ஒன்றின்மே லொன்றாக உறைந்து கொள்ளும்படியாகக் கட்டி, இப்படிக் கட்டப்பட்ட பைகள் பலவற்றை ஒன்றாக வைத்து மேலுங்கீழுமுள்ள மரங்களுக்கு நடுவில் அவைகளை சுறுசுறுப்பாக அனேகந்தடவைகள் முன்னும்பின்னுமாக ஓடும்படி உருட்டுகிறார்கள். இப்படி உருட்டுவதில் உள்ளேட்ள்ள ஊசிகளெல்லாம் அவற்றோடு கலந்துள்ள குருந்தக்கல்பொடி எண்ணெய் இவற்றோடு சேர்ந்து ஒன்றின் மேலொன்று பலமாக உறைந்துகொள்வதால் உண்டாகும் சொரசொரப்பு அவ்வூசிகளின் மேற்புறத்தை வழவழவென்று தேய்த்து பிரகாசமாகத் துலங்கச் செய்கின்றது. கொஞ்சநேரம் கழித்து அவைகளை வெளியிலெடுத்து குருந்தக்கல் பொடியும்

எண்ணெயும் சேர்த்து உருட்டினதால் ஊசிகள் தேய்பட்டு உண்டான கருப்புப் பசையைப் போக்க அவைகளை மரத்தூளோடு கலந்து ஒரு பீப்பாய்போன்ற உருளையில் போட்டு கரகரவென்று யந்திரத்தால் சுற்றுகிறார்கள். நன்றாகச் சுற்றியானபின் மரத்தூளையும் மற்ற அழுக்குகளையும் யந்திரத்தால் செய்த துருத்திவாயில்வைத்து ஊதித் தள்ளிவிடுகிறார்கள். பிறகு ஊசிகளையெல்லாம் மறுபடியும் முன்போல் குருந்தக்கல் பொடியோடு சேர்த்து அவை ஒன்றோடொன்று தேய்படும்படி உருட்டுகிறார்கள். இப்படி ஒவ்வொரு தடவையும் வரவர அதிக சன்னமான குருந்தக்கல்பொடி உபயோகித்துத் தேய்த்துக் கடைசியில் ஊசிகளெல்லாம் நன்றாகத் தேய்பட்டு அவற்றின் மேற்புரம் வெள்ளையாகி பளபளவென்று பிரகாசிப்பதானபின் முன்போல் அழுக்ககுகளை நீக்கி ஊசிகளை சவுக்காரமும் தண்ணீரும் போட்டுக் கழுவி மெருகுதோல் (wash-leather) என்று சொல்லும் ஒருவித மலை ஆட்டின் தோலில் போட்டுத் தேய்த்துத் துடைத்தெடுக்கிறார்கள். இப்பொழுது ஊசிகளைப் பார்த்தால் கொஞ்சங்கூட சொரசொரப்பின்றிமுற்றும் வழுவழுப்பாகவும் பிரகாசமாகவும் தோன்றும். கடைசியில் ஊசிமுனைகளை சரியாகக் கூராக்குவதற்காக கையினால் ஒன்றொன்றாக எடுத்து ஒரு சாணைக்கல்லில் பிடித்து ஊசியைத் தக்கபடி இரண்டொருதரம் திருப்புகிறார்கள். இது முடிந்தபின் ஊசிகளை நூறுநூறாகக் காகிதங்களில்கட்டி விற்பனைக் கனுப்புகிறார்கள். ஊசிகளைக் கட்டுமுன் அவைகளை யெல்லாம் கூர் ஒருபுறமும் காது ஒருபுறமுமாகவைத்து அடுக்கவேண்டும். இந்தவேலை விசேஷமாய் குழந்தைகளாலே செய்யப்படுகின்றது. இதற்காக வேலைச் சாலைகளிலுள்ள குழந்தைகள் ஊசிகளையெல்லாம் வரிசையாகப் பரப்பி ஒரு துணியை மடித்துக்கொண்டு ஒரு பக்கத்தில் அவைகளின்முனையில்பட அழுத்துகிறார்கள். கூரான முனை அந்தப் பக்கத்திலுள்ள ஊசிகளெல்லாம் துணியில் ஒட்டிக்கொண்டு வந்து விடுகின்றன. அவைகளை அப்படியே எடுத்து கூரான முனைகளெல்லாம் ஒரு பக்கத்திலிருக்கும்படி திருப்பிவைக்கிறார்கள். இப்படி கூர்முனைகளெல்லாம் ஒரு புரமாக இருக்கும்படி வைத்தானபிறகு நூறுநூறாக வெடுத்துக் காகிதத்தில் வைத்து மடக்குகிறார்கள். இது தையல் ஊசிகள் செய்யும்வகை. பெரிய ஊசிகள் பெரும்பாலும் ஒன்றொன்றாகச் செய்யப்படுகின்றன. ஆனால் அவை தையலூசியைப் போல் அவ்வளவு நேர்த்தியாகச் செய்யப்படுகிறதில்லை. ஊசி செய்யும்வேலைகளில் பல பிரிவுகள் இங்கிலாந்தில் பு[illegible] யந்திரங்களால் செய்யப்படுகின்றன, ஆயினும் அனேகபிரிவுகள் இன்னும் கைவேலையாகவே நடந்து வருகின்றன வென்று அறிகிறோம்.

---

## Historical Selections.

### The Romance of a Vanquished King (*Concluded*)

### சரித்திரவிலாசம்.

—:-:—

### ஜயிக்கப்பட்டு ராஜ்யத்தை விட்டோடின ஒரு முகலாய ராஜன் கதை.

(17-வது பக்கத் தொடர்ச்சி.)

பள்ளன் :—அரசனுடைய கொலுமண்டபத்தில் நுழைந்து அவனிடம் முறையிடப் போகையில் சேவகன் தடுத்துவிட்டானென்றும், அப்படி தடுத்தும் அவன் கேட்கவில்லையென்றும் சொல்லிவிட்டோம் அப்பொழுது அவர்களிருவருக்கும் பின் வருகிறபடி வாக்குவாதம் நடந்தது.

சேவகன் :—நீ இங்கே யாரைத் தேடிக் கொண்டுபோகிறாய்?

பள்ளன் :—உங்களுடைய சக்ரவர்த்தியைத்தான்.

சேவ :—அவர் சாதாரணமான மனிதர்களோடு பேசமாட்டார். மேலும் இப்படி மஹாசபை சேர்ந்திருக்கையில் அவர் உன்னைக் கண்ணெடுத்துக்கூடப் பார்க்க மாட்டார்.

பள் :—இந்தச் சக்ரவர்த்தி நல்ல விவேகியென்றும் நியாயஸ்தரென்றும் எங்கும் பிரசித்தியாயிருக்கிறதே ; நான் இப்போது ஒரு நியாயம் கேட்க வந்திருக்கிறேன். நீ இப்போது என்னைத் தடுத்து, நன்றாய் நியாயந் தீர்ப்பதனால் அரசர்க்குப் பெரும்புகழுண்டாவதையும், எனக்குப் பெருத்த லாபம் கிடைப்பதையும் நீ மறுக்கப் பார்க்கிறாய், இது உனக்கு நியாயமா?

சே :—நீ பள்ளனல்லவா?

பள் .—ஆனாலென்ன? நியாயத்துக்குப் பள்ளனென்றும் பார்ப்பானென்றும் ஏதாவது பேதமுண்டோ மகமதியார் பள்ளரைத் தாழ்வாக நினைப்பதில்லை. அதுவும் இந்தச் சக்ரவர்த்தி ஒருவருக்கும் அவமாரியாதை செய்வதில்லையே.

சேவ :—என்னவானாலும் நீ இப்போது இந்தச் சபைக்குப் போகக்கூடாது.

பள் :—ஏன் கூடாது?

சேவ :—ராஜாங்கத்துக் காரியங்களைப் பற்றிப் பேசுவதற்காகவே இந்தச் சபை கூடப்பட்டது. வேண்டுமானால் நீ ஒரு விண்ணப்பம் எழுதிக்கொள்.

பள் :—அப்படிக் கூடாது, இப்போது ராஜாவை நானே நேராகப் போய்ப் பார்க்க வேண்டும்.

சேவ :—நீ மாத்திரம் அடியெடுத்து வை ; அப்படியே உன்னைத் தள்ளி மிதித்துப் போடுகிறேன் என்றான்.

அவன் அப்படிச் சொல்வதற்கு முன்னமே பள்ளன் சரேலென்று நடந்தான். சேவகனும் பின்னேயே ஓடி அவனைப் பிடித்திழுக்க, பள்ளன், ஓ மோகலாய் சக்ரவர்த்தியே ஒரு நியாயமென்று உரத்துக் கூவினான்.

அந்தக் கூச்சலைக் கேட்டு ராஜா பொறுமையுடன் யாரங்கே நியாயங் கேட்கிறது? அவன் எதிரே வரட்டும் என்று சொல்ல, பள்ளன் உடனே போய் அவனெதிரில் கீழே விழுந்தான். அவனைப் பார்த்துச் சக்ரவர்த்தி, யாரப்பா நீ? எழுந்திருந்து உன் வியவகாரத்தைச் சொல்லென, அவனெழுந்தான்.

அவனுடைய முகத்தைப் பார்த்தவுடனே ராஜா அவன் இன்னானென்று தெரிந்துகொண்டு, ஓஹோ தோழனே, நீயா உனக்கு நான் எவ்வளவோ கடன்பட்டிருக்கிறேன்; என் ராஜ்யமெல்லாம் கொடுத்தாலும் அதற்குப் போதுமா என்று சொல்லி அந்தச் சபையிலுள்ளோரனைவரும் பார்த்துப் பிரமித்து நிற்கத் தான் ஆசனத்தினின்றும் எழுந்துபோய் அவனைக் கட்டியணைத்துக் கொண்டான்.

பின்பு சக்ரவர்த்தி சபையாரைப் பார்த்து, ஓ பிரபுக்களே, இந்த மனிதனாலேதான் நானிப்பொழுது பிழைத்திருப்பது பகைவனால் ராஜ்யத்தினின்றும் துரத்தப்பட்டபோது வழியில் ஒரு ஆற்றில் விழுந்து நான் தத்தளிக்கையில், அப்போது தனக்கிருந்த பெருந்துன்பத்தையும் பாராமல், திடீரென்று தண்ணீரிலிறங்கி யென்னைக் கைபிடித்துக் கரையிலிழுத்துப் போட்டு, பின்பு எனக்கு நினைவு தெரியாமல் குளிரும் காய்ச்சலும் பயங்கரமாய் வந்து வருத்தினபோது, என்னைத் தன் வீட்டில் வைத்துக்கொண்டு இராப்பகல் ஓய்வில்லாமல் உபசரித்த மஹோபகாரி யல்லவோ இவன்! இப்போது நான இவனுக்கு என்ன செய்தால் தான் என் கடன் தீரும் என்றான்.

அது கேட்டுப் பள்ளன் கண்ணீர் பெருகப்பெருக, மகாப்பிரபுவே, அந்தப் பழங்கதையெல்லாமிருக்கட்டும். அப்போது தாங்கள் தயவுசெய்து இரண்டாயிரம் ரூபாயினாலேதானே இப்போது எனக்குண்டாயிருக்கிற பெருமையெல்லாம். ஆயினும் அதனால் என் மனவருத்தம்மட்டும் நீங்கவில்லை யென்றான்.

அதுகேட்டு அரசன் அவனை ஸ்படிகாசனத்திலுட்காரவைத்துத் தான் மயிலாசனத்தில் உட்கார்ந்துகொண்டு, நடந்த வரலாறென்ன சொல்லென்று கேட்க, அவன் சொல்லுகிறான்.

"ஐயா, எனக்கொரு மகளுண்டு. தங்கள் கைகளால் தடவிக்கொடுத்த குழந்தைதான் அவள். அப்படித்தாங்கள் தடவிக்கொடுத்ததே தனக்கொரு பெருமையாக நினைத்துக்கொண்டு அவள் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தாள். என் உயிரைவிட மேலாக நான் நினைத்துக் கொண்டிருந்த அந்தப் பெண்ணை இங்கே யெவனோ திருடிக்கொண்டு போய்விட்டான் என்றான்.

அதுகேட்டு ராஜா; ஆம், அது எனக்கு நன்றாய் நினைவு வருகிறது. அவள் மிகவும் சிறப்பாக வாழ்வாளென்பது அப்போதே அவளுடைய முகக்குறியால் நன்றாகத் தெரிந்தது. ஆம் அவளைக் களவு செய்தவன் யார்? அவன் என்னாட்டில் எங்கேயிருந்தாலும் ஒரு நொடியில் பிடித்துவரச் சொல்கிறேன் என, பள்ளன் தங்களுடைய மந்திரி குமாரனே அப்படிச் செய்தவனென்று தோன்றுகிற தென்றான்.

அதைக் கேட்டுச் சக்ரவர்த்தி கம்பீரத்தொனியாய் ஓ மந்திரிகுமாரனே! எழுந்திரு; அவர் சொல்வதற்கு என்ன பதில் சொல்கிறாய் என, அவன் ஊமையாய் நின்றான். அதுகண்டு ராஜா மறுபடியும் கொஞ்சம் கடுமையாய், இப்படி மவுனமாக நின்றால் அதன் கருத்தென்னவென்று நான் கண்டுகொள்கிறதென்று கேட்க, அவன், நான் அந்தக் குற்றத்திற்கு ஆளானவன்தான்; மகாப்பிரபு அவர்கள் மன்னிக்க வேண்டுமென்றான். உடனே ராஜா பள்ளனைப் பார்த்து, உன் கோரிக்கை நிறைவேறியதென்று சொல்லி, மந்திரி குமாரனை அந்தக்ஷணமே காவல்செய்தான். அன்று ராத்திரி மோஹனம் என்கிற பெண் தந்தை வசத்தில் ஒப்புவிக்கப்பட்டாள்.

மறுநாள் ராஜா அந்தப் பள்ளனை அரண்மனைக்கு வரவழைத்து, அப்பா தோழனே! உன் ஜாதியாசாரத்தோடிருக்க உனக்கு விருப்பமில்லையென்று நன்றாகத் தெரிகிறது. தொன்று தொட்டுவந்த மதக் கோட்பாட்டை விடக்கூடாதென்கிற நிர்ப்பந்தமும் உங்களில் விசேஷமா யில்லையென்று தெரிகிறது. இப்போது உன் அந்தஸ்த்தை யுயர்த்தவேண்டுமென்பது என் கோரிக்கை. உனக்குச் சம்மதமானால் அப்படியே செய்கிறேன் என, பள்ளன் சற்றுத் தாமதித்துப் பின்பு அப்படியே அங்கீகரித்தான். மறுநாள் மந்திரிகுமாரனுடைய அந்தஸ்தும் அதற்கு வேண்டிய ஐசுவரியமும் பள்ளனுக்குக் கொடுக்கப்பட்டது.

அவர்களிப்படி மகம்மதியராக மாற்றப்படவே அப்பட்டணத்தார்க்கெல்லாம் மிகவும் சந்தோஷமாயிற்று. மோகனமும் மிகப் பெருமையடைந்தாள். மந்திரி குமாரனிடத்தில் அவளுக்கிருந்த கோபமும் கொஞ்சம் கொஞ்சமாய்த் தணிய ஆரம்பித்தது. அவன் அவள் விஷயத்தில் துராகிருதமான காரியமட்டும் ஒன்றும் செய்ததில்லை. அவளைத் தனிப்புறமாய் ஒரு விடுதிக்கு அழைத்துக்கொண்டு போய்த் தன் வசமாகும்படி வேண்டிக்கொண்டதே யொழிய வேறில்லை. அப்படிப்பட்ட காலத்திலும் தன்னிடத்தில் அவன் மிக்க கவுரவமும் பிரீதியுமாயிருந்ததை நினைக்க நினைக்க, அவளுக்கு அவனிடத்திலிருந்த கோபம் தணிந்து அவனைக் காவலிலிருந்து விடுவிக்கும்படித் தந்தையை வேண்டிக்கொள்ளும்படி யாயிற்று.

அது கேட்டுப் பள்ளன், குழந்தாய் நீ சொல்வதை நான் ஒருபோதும் தடுப்பதில்லை. ஆனால் இந்த விஷயத்தில் கொஞ்சம் அஞ்சவேண்டியிருக்கிறது ஒருவரையும் கேளாமல் ஒரு பெண்ணைப் பலவந்தமாய் இழுத்துக்கொண்டு போனவன் இன்னும் என்ன பொல்லாங்கு செய்வானோ வென்று பயமாயிருக்கிறது என்று சொல்ல, அவள் புன்னகையுடன் நீர், அப்படிச் சிந்திக்கவேண்டாம்; நான் அவன் ஆதீனத்திலிருந்தபோது கூட அவன் என்னைச் சிறிதும் கொடுமையாய் நடத்தினவனல்லன். அதனாலேயே நான் அவனை இப்போது மன்னிக்கும்படிக் கேட்கிறது; அவனுக்கு என்னிடத்தில் நேசமதிகமே. நான் பள்ளச்சியாயிருக்கையில் என்னை வேறுவிதமாய்க் கைப்பற்ற அவன் எண்ணங்கொண்டிருந்தாலும், அந்தஸ்து உயர்ந்தபிறகு இப்போது என்னைக் கலியாணம் செய்துகொள்ளச் சிறிதும் சந்தேகப்படமாட்டானென்று தோன்றுகிறது; நமக்காக ஒருவன் சிறைப்படுவது நியாயமன்று; அவனை விடுவிக்க வேண்டுமென்றான்.

இந்த விஷயத்தை அரசனுக்குத் தெரிவிக்கிறேனென்று அவன் மறுநாள் அரண்மனைக்குச் சென்றான். அரசன் அவனைப்பார்த்து என்ன விசேஷமென்று கேட்க, மந்திரிகுமாரனை விடுவிக்கும்படி என் மகள் மிகவும் வேண்டிக் சேட்டுக்கொண்டதனால், அதைத் தங்களிடத்தில் தெரிவிக்க வந்தேன் என்றான். அதைக் கேட்டு அரசன் சட்டத்தைமீறி இப்படிப்பட்ட பொல்லாங்கு செய்தவனை யொருபோதும் விடக்கூடாது. இவனை விட்டுவிட்டால் மற்றக் குற்றவாளிகளைமட்டும் நாம் எப்படித் தண்டிக்கலாம். அவன் செய்த காரியத்துக்குச் சிக்ஷையனுபவிக்க வேண்டுவதுதானென, பள்ளன்—அப்படியில்லை; அவன் என் மகளை வீட்டினின்றும் பலவந்தமாயிழுத்துக்கொண்டு போனதுதவிர மற்றெந்தக் கொடுமையும் செய்ததில்லையாம். அந்தப் பெண்ணே அவனை விட்டுவிடச்சொல்லி வேண்டுகிறாளென, உமாயூன், எப்படியும் அவன் செய்தது குற்றம் குற்றமே. அவனை விடுவிக்கவேண்டுமென்றால், ஏதோ ஒரு உடன்படிக்கையின்மேலேதான் விடவேண்டுமென்று சொல்லி அந்தக் குற்றவாளியைக் கொண்டுவரக் கட்டளையிட்டான்.

மந்திரி மகன் எதிரேவந்து நிற்கக்கண்டு அவனைப்பார்த்து ராஜா, அவன் செய்த தீச்செயலுக்காக அவனைச் சற்றே திட்டித் தூஷித்துப் பின்பு, நீ அந்தப் பெண் விஷயத்தில் செய்த அபராதத்தைத் தீர்த்துக்கொள்ள உனக்கு இஷ்டந்தானா வென்று கேட்க, அவளைக் கலியாணம் செய்துகொள்வதே அதற்குத் தக்க பரிகாரமாயிருக்குமாயின், அப்படியே நடத்த நான் சித்தமாயிருக்கிறேன் என்றான்.

மோகனத்தை அவன் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்கிற உடன்படிக்கையின்மேல் அரசன் அவனை விட்டுவிட்டான். பின்பு பள்ளன் அந்த மந்திரி குமாரனை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய் தன் மகளண்டை நிறுத்த, அவள் முதலில் அவனைக் கொஞ்சம் கோபித்தவள் போலப்பார்த்தாள். அதுகண்டு அவன் பலவிதமாய் நல்ல வார்த்தை சொல்லி, என் கண்ணே, நான் செய்தது குற்றமே; இப்பொழுது அந்தப் பிழையைத் தீர்த்துக்கொள்வதற்காகவே வந்திருக்கிறேன்; நீ முன் கேட்டபடியே நாமிருவரும் ஒத்திருக்க உனக்குச் சம்மதந்தானே யென்று கேட்க, நான் உன்பேச்சை யெப்படி நம்புகிறதென்றாள். அதற்கு அவன் என்பேச்சில் உனக்கு நம்பிக்கையில்லையா? முன் நானுன்னை வேண்டினதெல்லாம் உன்னிடத்தில் விருப்பினாலோ, வெறுப்பினாலோ? என் உட்கருத்தை நன்றாய் அறிந்த நீயே இப்படிப்பேசினால், மற்றவர்கள் என்ன நினையார்கள்? உன்மனதில் உருக்கமிருக்குமானால் நீ யென்பிழையைப் பொறுப்பாயென்பதற்குச் சந்தேகமில்லை யென்றான்.

அதைக்கேட்டு அவள் கொஞ்சம் புன்னகை நகைக்க, அவன் உடனே அவளை மார்போடணைத்துக்கொண்டு, இன்றுமுதல் நாமிருவரும் இப்படியே ஆயுளுள்ளளவும் மனமொத்து வாழவேண்டுமென்றான். அதற்கு அவளும் இணங்கிச் சந்தோஷமாயிருந்தாள். அன்றையதினமே அவ்விருவருக்கும் விசேஷவைபவமாய் கலியாணம் நடந்தேறிற்று. மொகலாய சக்ரவர்த்தியே நேரில்வந்து அதை நடப்பித்து அவர்கள் எந்நாளும் ஒருகுறையுமின்றி மிகப்பெருமையாக வாழவேண்டுமென்று வாழ்த்தினாரென்றால், பின்பு அவர்களுக்கு குறையென்ன! இப்படியாகக் கடைசியில் அந்த ஜோஸியக்காரி சொன்னது சரியாகப்பலித்தது. இந்த மந்திரிகுமாரனும் பள்ளச்சியும் உள்ளூற ஆசைகொண்டு நெடுநாளாய் வேண்டுமென்று விரும்பிச் செய்துகொண்ட கலியாணம் போலக் கலியாணம் செய்துகொள்கிறவர்களுடைய பாக்கியமல்லவோ பாக்கியம்! இப்படி ஒருவருக்கு நேருமானால் இவ்வுலக வாழ்க்கையில் அவர்பெறும்பேறு அதைவிட வேறென்ன?

"பெண்ணிற்பெருந்தக்க யாவுளகற்பென்னும்
திண்மையுண்டாகப் பெறின்."

முற்றும்.

---

## Teachers' Column.

### உபாத்தியாயர் பக்கம்.

—:(*):—

### பிரதம பாடசாலை உபாத்தியாயர்கள் கவனிக்க வேண்டியவைகள்.

(Originally Contributed to the Viveka Chintamani By Mrs I. Brander.)

பின் வருகிற விஷயங்கள் மிகவும் சாதாரணமானவைகள். ஆனபோதிலும் பாலிகா பாடசாலைகளிலுள்ள உபாத்தியாயர்கள் அவைகளுக்கு கவனிக்காமலிருப்பதை யடிக்கடி நான் பார்த்திருக்கிறபடியால்

இங்கே அவைகளை விவரித்துச் சொல்கிறேன். கவனிக்கவேண்டிய விஷயங்களில் முக்கியமானவை:—

1. பாடம் நடக்கையில் கவனித்தல்.

2. உபாத்தியாயர்கள் கேள்விகேட்க வேண்டிய முறை.

3. கடினமான அம்சங்களைத் தெரிவாகச் சொல்லல்.

4. விவரித்துச் சொல்லல்.

5. உபமானங்களை யுபயோகித்தல்.

6. உபாத்தியாயர் பாடம்போதிக்கத் தயார் செய்யல்.

7. மாணாக்கர்கள் பாடம் கேட்கத் தயார்செய்யல்.

8. வீட்டுப் பாடங்கள்.

### 1. பாடம் நடக்கையில் கவனித்தல்

பாடம் நடக்கையில் பிள்ளைகள் கவனித்தாலொழிய அவர்களுக்கு ஒரு பிரயோஜனமுமில்லை. போதிக்கும் முறை தெரியாத புது உபாத்தியாயர்கள் பாடம் நடக்கையில் பிள்ளைகள் தங்கள்மேல் கருத்தாயிருந்து தாங்கள் சொல்வதைக் கவனிக்கும்படி செய்யத் தவறிப் போகிறார்கள். இதற்கு ஒரு காரணம் என்னவெனில் பாடம் நடத்தும் பொழுது அவர்கள் எல்லாப் பிள்ளைகளையும் கவனித்துப்பார்த்து வராமல் யாரோ ஒரு பிள்ளையை மட்டும் பார்த்துப் பேசுகிறார்கள். அவர்கள் பின் சொல்லப்படுகிற சங்கதிகளைக் கவனிக்கவேண்டியது:—

உபாத்தியாயர் எல்லாப் பிள்ளைகளையும் இலகுவாய்ப் பார்க்கும்படியாய் கறுப்புப் பலகைக்கு இடதுபக்கத்தில் வசதியான இடத்தில் உட்காரவேண்டும்.

கறுப்புப் பலகை, படம் முதலிய உபகரணங்கள் எல்லாப் பிள்ளைகளும் பார்க்கக்கூடிய இடத்திலிருக்கவேண்டும்.

உபாத்தியாயர் இடுகிற இடங்கள் சுருக்கமாயும் தெளிவாயு மிருக்கவேண்டியது அனாவசியமான வார்த்தைகளைப் பேசிக் காலத்தையும் சக்தியையும் வீணாகக்கழிக்கக்கூடாது.

கட்டளை யிட்டவுடனே எல்லாப் பிள்ளைகளும் ஏகமாய் வரவேண்டும்.

இட்ட கட்டளைப்படி யாராவது செய்யாவிடில் உபாத்தியாயர் தாமிருக்குமிடத்தைவிட்டு அவர்களிருக்கு மிடத்துக்குப்போய் அவர்களை கையால் பிடித்திழுத்து உட்காரவோ நிற்கவோ செய்யாமல் சொன்ன வார்த்தையைச் சொன்னபடி அவர்களே தடையின்றிச் செய்யப் பழக்கிவரவேண்டும்.

தெளிவாயும், உறுதியோடும், பிள்ளைகள் பிரீதியோடு உடன்பட்டு நடக்கும் மாதிரியாகவும் கட்டளையிடவேண்டியது. ஒரு கட்டளையை ஒரே முறைக்குமேல் இடக்கூடாது. பாடம் கற்பிக்கும் பொழுது உபாத்தியாயர் பிள்ளைகள் எல்லாரையும் பார்த்துப் பேசவேண்டியது தான் சொல்வதை எல்லாப் பிள்ளைகளும் கவனிக்கிறார்களா என்பதையும் பார்க்கவேண்டியது.

கறுப்புப் பலகையில் எழுதும்பொழுது பிள்ளைகள் எல்லாரும் அதன்மேல் கவனமாயிருக்கும்படி பார்த்துவரவேண்டும். அதற்காக, சிறுபிள்ளைகளாகவிருந்தால் பலகையில் எழுதுவதை யெழுத்துக் கூட்டவும், பெரிய பிள்ளைகளாயிருந்தால் எழுதுவதைச் சொல்லவும் செய்விக்க வேண்டியது. எழுதினபிறகு எல்லாரையும் வாசிக்கச் செய்யவேண்டியது.

### கேள்விகேட்கும் முறை.

கேள்விகள் கேட்கும்பொழுது எல்லாப் பிள்ளைகளையும் பார்த்துக் கேட்கவேண்டியது. ஆனால் மறுமொழி மாத்திரம் ஒரு பிள்ளையிடத்திருந்தே வாங்கவேண்டியது.

கேட்கும் கேள்வி ஸ்பஷ்டமாயும் நிச்சியார்த்தமுள்ளதாயு மிருக்கவேண்டும். அதாவது அந்தக் கேள்விக்கு ஒரே மறுமொழி கொடுக்கத்தக்கதா யிருக்கவேண்டும். இந்த ஸங்கதி பின்வரு முதாரணத்தால் தெளிவாகும்.

உத்தரப் பிரதியுத்தர மூலமாய் ஒரு நாயின் பாதத்திற்கும்ஒரு பூனையின் பாதத்திற்குமுள்ள பேதத்தைப் பிள்ளைகளுக்குக் கற்பிக்கவேண்டி யிருந்தால் ‘நாயின்பாதம் எப்படி யிருக்கிறது ? பூனையின் பாதம் எப்படியிருக்கிறது ?’’ என்று மொத்தமாய் ஒரே கேள்வி கேட்டுவிடக் கூடாது. ஆனால் அனேகர் இந்த மாதிரியாகவே கேட்கிறார்கள். அது மிகவும் தப்பு ஏனென்றால் மேலே குறித்த கேள்விக்கு ஒரே மறுமொழி யின்றி பலவிதமான உத்திரங்கள் சொல்லக்கூடியதா யிருக்கிறது. ‘நாயின் பாதத்தில் இத்தனை விரல்கள், பூனையின் பாதத்தில் இத்தனை. இதுதான் வித்தியாஸம் என்று ஒருபிள்ளை சொல்லலாம் மற்றொருபிள்ளை ‘இதில் நகங்கள் கூர்மை; அதல் அவ்வளவு கூர்மையில்லை; என்று சொல்லலாம். இத்தமாதிரி எதைச் சொன்னாலும் உபாத்தியாயர் ஒப்புக்கொள்ள வேண்டியதாகத்தானிருக்கும்

உபாத்தியாயர் எந்த அம்சத்திலுள்ள வித்தியாசத்தைக்குறித்துக் கேட்டாரென்பது ஸ்பஷ்டமா யில்லாததினால், பிள்ளைகள் அந்த ஜந்துக்களின் பாகத்தைக் குறித்து எதைச் சொன்னாலும் சரி 'இன்னும்?' என்று கேட்கும் படியாகத்தான் இருக்கும்.

கேள்விகளை அந்தமாதிரி கேட்கக் கூடாது. மேலே குறித்த அம்சத்தை யொட்டி பின்வரும் மாதிரியான கேள்விகள் கேட்பது சரியாயிருக்கும்:—

நாய்க்கு எத்தனை நகங்கள்? பூனைக்கு எத்தனை? இந்த இரண்டில் எதற்கு அதிகம்? இந்த நாயினுடைய நகங்களின் நுனியையும், இந்தப் பூனையினுடைய நகங்களின் நுனியையும் இதோ இங்கே வந்து தொட்டுப்பார். என்ன பேதம் தெரிகிறது? நகங்களை தானாக அசைக்கும் அல்லது இழுத்துக் கொள்ளும் சக்தி நாய்க்கு உண்டா?

பூனைக்கு அவ்விதம் சக்தி உண்டா?

பூனை எம்முகமாகத் தன் கால் நகங்களை யிழுத்துக்கொள்கிறது?

நாயின் உள்ளங் காலையும் பூனையின் உள்ளங்காலையும் கையால் தொட்டுத் தடவிப்பார். எது அதிக மிருதுவா யிருக்கிறது சொல் பார்ப்போம்?

இந்தமாதிரி கேள்வி கேட்டால்தான் பிரயோஜனமுண்டு. ஒவ்வொன்றும் தெளிவாயும் வியக்தமாயுமிருப்பதுடன் ஒவ்வொரு கேள்விக்கும், உபாத்தியாயர் மனதில் எதை யுத்தியேசித்துக் கேட்டாரோ அதைத் தவிர வேறு மறுமொழி சொல்வது சரியாயிராது. அன்றி பிள்ளைகள் அநேக அம்சங்களைத் தாங்களே கவனித்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளச் செய்வதாயு மிருக்கிறது.

கேட்கிற கேள்வி பிள்ளைகளின் வயதுக்கும் திறமைக்கும் தக்கதாயிருக்க வேண்டும். உதாரணமாக மேலே குறித்த கேள்விகள் 2-வது ஸ்டாண்டர்ட் பிள்ளைகளைக் கேட்கத் தக்கவை. இந்த வகுப்புப் பிள்ளைகளுக்கு அம்சங்களை தனித்தனியே குறித்துக்காட்டிக் கேள்வி கேட்கவேண்டும்.

இந்தச் சங்கதியைப்பற்றியே 4-வது ஸ்டாண்டர்ட் பிள்ளைகளுக்குச் சொல்ல வேண்டியதா யிருந்தால் 2-வது ஸ்டாண்டர் வகுப்பில் ஒவ்வொரு அம்சத்தையும் குறித்துக் காட்டி கேள்வி கேட்டதுபோல் கேட்கலாம், "நாயின் பாதம் பூனையி பாதம் இந்த இரண்டிற்குமுள்ள வித்தியாசங்களில் ஒன்றைச் சொ? இன்னொரு வித்தியாசம் சொல்?" என்று கேட்கலாம். இந்தக் கேள்விகளும் முன் கேட்ட கேள்விகளுக்கும் என்ன வித்தியாசமென்றால், இவைகளுக்கு மறுமொழி சொல்லப் பிள்ளைகள் கொஞ்சம் அதிகமாக யோசிக்க வேண்டியதுடன், அதிக விஸ்தாரமாக பதில் சொல்ல வேண்டியதாகவு மிருக்கும்.

ஒரே கேள்வியை பலமுறை யடுத்தடுத்து அல்லது உடனுக்குடனே மாற்றிக் கேட்கிறவாடிக்கை கூடவே கூடாது. முன்னதாக நன்றாய் ஆலோஜித்துத் தெளிவான விதமாய் கேள்வியைக் கேட்டால் பிறகு மாற்றவேண்டிய அவசியம் நேரிடாது. ஆகையால் தீர ஆலோசித்துப் பிறகுதான் கேள்வி போடவேண்டும். கேள்வியை ஒரேமுறை போட்டு அதற்கு மறுமொழி கொடுக்க பிள்ளைகளுக்கு வேண்டிய அவகாசமும் கொடுக்க வேண்டும். பிள்ளைகளும் ஆலோசனைசெய்து பிறகுதான் மறுமொழி கொடுக்க வேண்டும் வாய்க்கு வந்ததைச் சொல்லிவிடக் கூடாது. பிள்ளைகள் ஏதாவது மறுமொழிசொல்ல ஆரம்பித்த உடனே உபாத்தியாயர் அதைப் பூர்த்தி செய்யவாவது அல்லது பிள்ளைகள் சொல்ல ஆரம்பிக்கிற சங்கதியை சரி, சரியல்ல வென்று அவர்களுக்கு உடனே தெரியும்படியான சூசனைகள் காண்பிக்கவாவது கூடாது. பிள்ளைகள் மறுமொழி முடியச் சொல்லியபிறகுதான் அவர்கள் சொல்லியது சரி, சரி யல்ல வென்று காண்பிக்கவேண்டும். ஆரம்பத்திலேயே சூசனை காண்பித்தால் பிள்ளைகளுக்கு உபாத்தியாயர் முகத்தைப் பார்த்துப் பார்த்து உடனே மறுமொழியை மாற்றுகிற கெட்டவாடிக்கை யுண்டாகும். தானே ஆலோசித்து நிச்சயமாய் ஒரு சங்கதியை அறிந்து அதை தெளிவாய்ச் சொல்ல தைரியமும் ஏற்படாது.

பிள்ளைகள் கொடுக்கும் மறுமொழிகள் சரியாயிருந்தால் அதை அங்கீகரிக்க வேண்டியது. உபாத்தியாயர் எதிர்பார்த்தபடி யில்லை யென்ற காரணத்தினால் அதை ஒப்புக்கொள்ளா திருக்கக் கூடாது. பிள்ளைகள் கொடுக்கும் மறுமொழி கொஞ்சம் சரியாகவும் கொஞ்சம் பிசகாகவும் இருந்தால் தப்பான பாகத்தை உபாத்தியாயர் தானே திருத்திச் சொல்லிவிடாமல் தகுந்த கேள்விகள் மூலமாய் இன்னது பிசகென்று அதைச் சொன்ன பிள்ளைக்குத் தெரியக் காண்பித்து அப்பிள்ளை தானே யதைத் திருத்தும்படி செ

ய்யவேண்டியது. பிள்ளைகள் சொன்ன மறுமொழிகளை சில உபாத்தியாயர்கள் திருப்பித் திருப்பித் தாமும் சொல்லுகிறார்கள். இதுமிகவும் கெட்டவழக்கம். பிரயோஜனமில்லாமல் அதையே யடிக்கடிசொல்வதனால் பாடத்தில் ரஸமில்லாமல் போகும். ஒரு பையன் ஒரு ஸரியான மறுமொழி சொல்ல ஆரம்பித்து நடுவில் தடுமாறினால் அவனை 'சொல்லு, உறத்திச் சொல்லும்' என்று பலவாறாக தைரியமூட்டுகிறார்கள். அதுவும் சுத்தப்பிசகு. அனேகப் பிள்ளைகள் கேட்ட கேள்விக்கு தகுந்த மறுமொழியாலோசித்துச் சொல்லாமல் வாய்க்குவந்ததைச் சொல்லுகிறார்கள். ஒரு உதாரணம் எடுத்துக்கொள்வோம். உபாத்தியாயர் ஒரு வார்த்தையை அது என்ன சொல் என்று கேட்டதாக வைத்துக்கொள்வோம். பிள்ளை ஸந்தேகத்துடன் 'பெயர்ச்சொல்' என்று சொல்லிக்கொண்டே தான் சொல்லுவது ஒப்புக்கொள்ளப்படும் போலிருக்கிறதா இல்லையாவென்று உபாத்தியாயர் முகத்தைப் பார்க்கிறான். அவருடைய முகக்குறி அநுகூலமாயிருந்தால், தைரியமாய் பெயர்ச்சொல் என்று சொல்கிறான். உபாத்தியாயர் முகக்குறி அநுகூலமாயில்லாவிட்டால் உடனே தன்னை திருத்திக்கொள்ளயெத்தனப்பட்டு 'அது இல்லை வினைச்சொல்' என்கிறான். இதுவும் தப்பென்று அவன் நினைக்கக் காரணமிருந்தால் உரிச்சொல் என்கிறான். இந்தப்படி ஆலோசிக்காமல் சொல்வதும் அடிக்கடி உபாத்தியாயர் முகத்தைப் பார்த்துப் பார்த்துத் திருத்திக்கொள்வதும் உபாத்தியாயர் எச்சரிக்கை செய்கிறதும் ஆகிய இதெல்லாம் கெட்ட வாடிக்கை. இந்தப்படி செய்த பிள்ளைகளுக்கு ஆலோசித்து பதில் சொல்லும் வழக்கம் ஏற்படாது. நன்றாய் ஆலோசித்து மறுமொழி சொல்ல பிள்ளைகளை வழக்கப்படுத்த வேண்டியது. பிள்ளைகள் தங்கள் மறுமொழிகளைச் சொல்லிமுடிக்கும் வரையில் உபாத்தியாயர் அது ஸரி, ஸரியல்லவென்று குறிப்பாயாவது வெளிப்படையாகவாவது தெரிவிக்கக் கூடாது.

கேள்விகளில் 'போதனைக்கு வேண்டிய கேள்விகள்' 'பரீக்ஷைக் கேள்விகள்' என்று வித்தியாசம் உண்டு. இந்த ஸத்தியை கவனத்தில் வைக்கவேண்டும். பிள்ளைகளுக்கு எந்த ஸங்கதி போதிக்க வேணுமென்று உபாத்தியாயர் உத்தேசிக்கிறாரோ, அந்த ஸங்கதியை பிள்ளைகளுக்கு தாமே நேரில் சொல்லாமல் தானே அவர்கள் தாமே தெரிந்துகொள்ளும்படியான மாதிரியாய் சிறுகச் சிறுகக் கேட்கப்படும் கேள்விகள் போதனைக்குரிய கேள்விகளாம். ஒரு ஸங்கதியை நன்றாய் போதித்த பிறகு, சொல்லிக்கொடுத்த ஸங்கதியை பிள்ளைகள் நன்றாயறிந்து மனதில் ஞாபகம் வைத்துக்கொண்டிருக்கிறார்களா என்று தெரிந்துகொள்ளக் கேட்கும் கேள்விகள் பரிக்ஷைக் கேள்விகள். மேலே நாய், பூனை இதுகளின் பாதங்களைப்பற்றி போட்டுக் காண்பித்த கேள்விகள் போதிக்கும் கேள்விகள். நாம் நேரில் இன்ன இன்ன அம்சத்தில் வித்தியாஸம் என்று ஒரே தடவையாய்ச் சொல்லிவிடாமல் உள்ள வித்தியாஸங்களை சிறுகச்சிறுக அந்த கேள்விகள் பிள்ளைகளுக்கே வெளிப்படுத்தும். அப்படி கேட்டதால்தான் தாமே நேரில் கவனித்துப் பார்த்துதெரிந்து கொள்ளும் நல்ல வழக்கம் பிள்ளைகளிடத்தில் ஏற்படும். போதனைக் கேள்விகள் மூலமாய் பின்வரும் கணிதத்தை கற்பிக்கிறதற்கு இன்னமாதிரி கேள்விகள் போடவேணுமென்று உதாரணமாக எடுத்துச் சொல்வோம்.

## கணக்கு.

12 மனிதர்கள் ஒருவேலையை 9-நாள்களில் செய்வார்கள். அப்படியானால் அதே வேலையை அவர்களில் 7-பேர் எத்தனை நாளில் செய்வார்கள்?

## போதனைக் கேள்விகள்.

இந்த கணக்கில் என்ன கொடுத்திருக்கிறது? நாம் என்ன கண்டுபிடிக்கவேண்டியது? என்ன கொடுத்திருக்கிறதோ அதை கறுப்புப் பலகையில் எழுதுவோம்.

12 மனிதர்கள் ஒரு வேலையைச் செய்ய 9-நாள் பிடிக்கும்.

1 மனிதனுக்கு எத்தனைநாள் பிடிக்கும் என்பதை கண்டுபிடிப்போம்.

12 மனிதரைப் பார்க்கிலும் 1 மனிதன் அதிகமா? குறைச்சலா? மற்ற 11 பேரும் அவனுடன் கூடவிருந்து வேலை செய்யாமல் தான்மட்டும் ஒண்டியாக இருந்து வேலைசெய்தால் அவனுக்கு ஜாஸ்திநாளாகுமா குறைச்சல் நாளாகுமா? 12 மனிதருக்கு ஆன நாள்களைவிட எவ்வளவுமடங்குநாள் அதிகம் பிடிக்கும்? 12 மனிதருக்கு ஆனகாலமென்ன? ஆகையால் 1 மனிதனுக்கு எத்தனைநாள் ஆகும்? அதை யெழுதுவோம்.

1 மனிதன் அதே வேலையை செய்ய 9×12 நாள் எத்தனை மனிதருக்கு வேண்டிய காலம் நமக்கு தெரியவேண்டியது ?

1. மனிதனுக்கு எத்தனை நாளாச்சுதோ அதைவிட 7-பேருக்கு அதற்கு அதிகமாகுமா குறைச்சலாகுமா.

7-எண் 1-ல் எத்தனுவது பாகம் ?

ஆகையால் 1-மனிதனுக்கு எத்தனை நாள் பிடித்ததோ அதில் எத்தனுவது பாகமிருந்தால் 7-பேருக்கு போதும்.

இதை பலகையில் எழுதுவோம்.

7-மனிதர்கள் அதேவேலையை $\frac{9\times12}{7}$ அல்லது 153/7 நாள்களில் செய்வார்கள்.

போதனைக்கேள்விகள் இந்தமாதிரி பிள்ளைகளை தாங்களேயோசித்து, கேட்டதை கண்டுபிடிக்கும்படி செய்யவேண்டும். இந்தப்பிரகாரம் நாம் சொல்லிக்கொடுத்த கணக்கைப்பிள்ளைகள் நன்ருய் அறிந்து கொண்டார்களா இல்லையாவென்று தெரிந்துகொள்ள பின்வரும் பரீக்ஷைக்கேள்விகள் போடவேண்டியது.

இந்த கணக்கு செய்ததில் முதல் முதல் நாம் என்ன கண்டுபிடித்தோம் ? முதலில்எதைப்பலகையில் எழுதினேம்? பலகையில் முதலில் எழுதினதைவாசி. அடுத்தாப்போல் என்னசெய்தோம்? இந்த பரிக்ஷை கேள்விகள் ஏற்கனவே சொல்லிக்கொடுத்த அம்சங்கள் ஞாபக மிருக்கிறதாவென்று உபாத்தியாயர் அறிந்து கொள்ள உபயோகமே தவிர எதைச் சொல்லிக்கொடுக்க உத்தேசமோ அதை புலப்படுத்தும்படி கேட்கப்படும் கேள்விகள் அல்ல.

(இன்னும் வரும்.)

———:(*):———

## A Kindergarten Story.

### பால பிருந்தாவனம்.

ஓர் போதனு கதை.

யமுனா நதிக்கரையிலிருக்கும் அழகிய மதுராபுரியில் பிருந்தாவனமென்று ஒரு அதிசயமான தோட்டமுண்டு. அதிலில்லாத புஷ்பவகைகள் கிடையா. சோலை மையிருட்டுப்போல் தழைத்திருக்க அமாவாசையிருட்டில் பிரகாசிக்கும் நட்சத்திரங்கள்போல் பற்பல புஷ்பங்கள்விளங்கின. அங்கிருந்த புஷ்பவகைகளின் அழகையும் வாசனையையும் இவ்வளவு என்று சொல்வது அசாத்தியம். புஷ்பங்களை பாணமாய் தொடுக்கிற மன்மதனுக்கு ஆயுதசாலையோ, நாலு சமுத்திரங்களும் தினமொருதரம் சலியாமல் அலைந்து திரிந்து வாசனைகளைப் பாவச்செய்யும் வாயுபகவானுக்கு முதற் கொள்ளுமிடமோ அல்லது இந்த புஷ்பங்கள்தான் சாபத்தால் பூமியில் அவதரித்திருக்கும் தேவஸ்திரீகளோ, இதுதான் அவர்கள் தபசுசெய்யும் ஆசிரமமோ என்று சந்தேகிக்கத்தக்கதாயிருந்தது.

இந்த அற்புதமான தோட்டம் சர்ப்பத்தின் தலையிலுள்ள இரத்தினம்போல் ஒரு லோபிச்செட்டியின் வசத்திலிருந்தது. அவனை 'எரிமூஞ்சி' என்று சொல்வார்கள். அவன் பார்த்தால் பச்சைமரமும் பட்டுப்போம். அவனைக்கண்டமாத்திரத்தில் புருக்களும், மான்களும், குழந்தைகளும் பயந்து ஓடும். எப்பொழுதும் தணல்போல் கண்களும், சர்ப்பம் சீறுவதுபோல் மூச்சும், போட்ட எள் வெடிக்கும்போல் நெற்றியுமுள்ளவன். இவனைக்கண்டவர் யாரும் கொள்ளிவாய்ப் பிசாசு என்று கூவி திக்குத்திக்காய் ஓடுவார்கள். ஒரு நாள் காலையில் 6 அல்லது 7 குழந்தைகள் கைகோர்த்து கீழே கால்பாவாது குதித்துக்கொண்டே தோட்டத்தைப் பார்க்க வந்தனர்கள். களங்கமற்ற சந்திரனைப்போலிருக்கும் அவர்கள் முகத்திலுள்ள பவழ உதடுகளிலிருந்து அமுதத்திற்கு மேலான மழலைச் சொற்கள் பெருக உல்லாசமாய்ப் பேசிவந்தார்கள். லலிதை, லீலாவதி, விமலை என்ற பெண்குழந்தைகளும், அசோகன், ஆநந்தன், பிரஹலாதன் என்ற ஆண்குழந்தைகளுமாக அவர்கள் ஆறுபேர்கள். லலிதை என்பவள் அசோகனைப்பார்த்து, பார்த்தாயா ஆகாயத்தில் என்ன ஒரே ரோஜாப்பூவாயிருக்கிறது என்ருள். அதைக்கேட்டு அசோகன் இதென்ன உனக்கு தெரியாதா, நம்பாராஜா புறப்படுகிற போதெல்லாம் முன்னுல் பூவாரி இறைக்கிறது பார்த்ததில்லையா? சூரியன் புறப்படுகிருர். அதற்காக தேவதைகள் ரோஜாவை இறைக்கிருர்களாம் என்ருன். அந்த க்ஷணமே லீலாவதி தென்னண்டைப் புறத்திலிருந்து சூரியன் புறப்படு மிடத்துக்கு கன்னம் கரேலென்றிருக்கும் மதயானைகள் போன்ற சில மேகங்கள் கூட்டம் கூட்டமாய் சேர்ந்ததைப் பார்த்துக்கொண்டிருந்தாள். உடனே கறுத்திருந்த மேகங்களெல்லாம் பத்தரை மாற்றுத் தங்கமாய் மாறின. அதுகண்டு உடனே பிரகலாதனைக் கூவிக்கேட்க, பிரகலாதனும் மகிழ்ந்து, நம்மூர் கிருஷ்ணமூர்த்தி சுவாமி வெளி

பிலே புற்பப்பவேதானல் யானைகளுக்கு தங்கசேணங்கள் ஆபரணங்கள் பூட்டிப்போவதை மிறந்துபோய் விட்டாயா? இவை சூரியன் பயணத்துக்காக வந்திருக்கும் யானைகள் என்றான்: இவ்வாறு பேசிக்கொண்டே வழிநடந்தது தெரியாமல், தோட்டம்வந்து சேர்ந்துவிட்டார்கள். விமலையும், ஆநந்தனும் மாத்திரம் சற்றுமுன் வந்துவிட்டார்கள். வந்து மல்லிகைப் பூக்களை குவியலாய்போட்டு இதைத்தான் கலியாணம் செய்துகொள்வேனென்று ஆனந்தனும், இந்தப்பூக் குவியல்தான் எனக்கு அகம்படையானென விமலையும் பேசிச் சந்தோஷித்தார்கள். பன்னீர்பூக்கள் கண்ணில்படவே லீலாவதி எனக்கு ஒன்று என்று அசோகனைக்கேட்க, அவனும் பறிக்க மாம் ஏறினன். ஏறவே குழந்தைகளெல்லாம் எனக்கு எனக்கென்று கேட்க கைநிரம்பப்பறித்து இறங்கினன். 'லீலாவதீ, பார்த்தாயா, வெள்ளிநாயனம்போலிருக்கிறது.' என, 'ஆமா ஆமா சம்பகத்தின் காது குத்துகிறபோது வாசித்தானே அந்த வாத்தியம்போலிருக்கிறது' என்று எல்லாரும் சொல்ல, இந்த வாத்தியத்தை யார் வாசிக்கிறார் என்று லலிதை கேட்டாள். மாத்தைப் பார்த்துக்கொண்டிருந்த பிரகலாதன் 'இதோ பார்' இந்த வண்டு அந்தப்பூவை வாயில்வைத்து ஊதுகிறது வாத்தியக்காரனைப் பிடித்துவிட்டேன்' என்று குதித்தான். மற்றக்குழந்தைகளெல்லாம் 'எனக்கு ஒரு பூ' எனக்கு ஒரு பூ என்றுகேட்க, விமலைமாத்திரம் எனக்கு வேண்டாமென்று சொல்லி, 'கிளையிலிருந்து பூவை பறிக்கிறது எரிகிற விளக்கை அணைக்கிறதுபோல்; விளக்கை அணைக்கிறது தோஷம் என்றாள். 'எனக்கும் வேண்டாம், என்று ஆநந்தனும் சொல்லிவிட்டு, 'அம்மாகூட சொல்லியிருக்கிறாள். சகுந்தலை என்று ஒரு பெண்ணும் அவள் தன் தங்கைபோல் அருமையாய் வளர்த்த பூவில் ஒன்றைக்கூட கிள்ளமாட்டாளாம். அதுவேயில்லை; பூவில் கந்தர்வாள் வந்திருக்கிறதுண்டாம். நாம் பறிக்கக்கூடாது' என்று விமலையும் அவனுமாக ஒரு கதம்ப மாத்தண்டைக்குப் போனார்கள். இரத்தின கம்பளம் விரித்தாற்போல் மாத்தடியில் ஒரே சிவப்பா யிருந்ததைக்கண்டு மாத்திலிருக்கும் வண்டுகள் பாட்டையும் கேட்டு இங்கே என்ன பாட்டுக் கச்சேரியோ என்றுசொல்லி ஆச்சரியமுற்று சற்று நின்றார்கள். பிறகு விமலை, அதோ தோரணம் தோரணமாய் தொங்குகிறதைப்பார். கல்லிழைத்த இரத்தின மாலைகள் போலிருக்கிறது என்று சொல்லி சுற்றிச்சுற்றி ஓடினாள். இப்படிச் சற்றுநேரம் விளையாடிக்கொண்டிருந்தபின், மற்றவர்களைக் காணோமே என்று தேடி ஓடிவர எல்லாரும் மாமாத்தண்டை வந்துசேர்ந்தார்கள். நானொரு அதிசயம் கொண்டு வந்திருக்கிறேன் என்று ஆநந்தன் சொல்ல நாங்களும் ஒன்று கொண்டு வந்திருக்கிறோமென்று பிரகலாதனும் மற்றவர்களும் சொன்னார்கள். ஒரு அந்திமல்லிகைப் பூவையும் மாணிக்கப்பூவையும் காட்டி என்ன அதிசயம் மேல்பூவிலே, உள்ளே பார்த்தாயா? 6-காம்புகள் போலிருக்கின்றன, 5-சிவப்பு, ஒன்று வெள்ளை; அது இந்த ஐந்துக்கும் மத்தியிலிருக்கிறது; என்ன அழகாயிருக்கிறதுபார். பஞ்சபாண்டவர்களும் திரௌபதையும் போலிருக்கிறது. நீங்களெல்லாரும் பட்டுப்படுதாப்போலிருக்கிற மேல்பூவை மாத்திரம் பார்த்திருப்பீர்கள். அதில் ஒளிஞ்சு கொண்டிருக்கிற * கள்ளன் கள்ளத்திகளைப் பிடித்துவிட்டேனென்று பெருமை பேசிக்கொண்டான். பிரஹலாதன் நாங்களும் ஒரு பூ கொண்டு வந்திருக்கிறோம்; என்றான். 'என்ன, என்ன' என்று எல்லாரும் கேட்க, பிரஹலாதன் நாங்களும் ஒரு பூ கொண்டுவந்திருக்கிறோம். இன்னொன்றும் கொண்டுவந்திருக்கிறோம்; என்றான். 'என்ன, என்ன' என்று எல்லாரும் கேட்க, பிரஹலாதன ஒரு எருக்கம் பூவை யெடுத்து உள்ளேபார் ஒரு 4-கால் மண்டபம். சித்திர வேலையைப்பார் என்று சொல்லிக் காட்டினான். இப்படி யிருக்கவே அசோகன் என்பங்கு சொத்தையா, இதோ பார் ஒரு பாடகர் கொண்டுவந்திருக்கிறேனென்று நாகப் பழம்போல் கருத்த ஒரு வண்டை எடுத்தான். ‡ இவர் பூவுக்குப் பூ ஓடி நளனுக்குந் தமயந்திக்கும் ஹம்சம் சேதிகொண்டு போனது போல் சமாசாரம் சொல்லுகிறது. 'எல்லாரும் தேவலைதான். நீ பஞ்சபாண்டவர்களைக் கண்டு பிடித்தால் எனக்கு ஒரு கட்டடமகப்பட்டது. அசோகனும் ஒரு ஹம்ஸம்போல் தூதுபோகும் வண்டு பிடித்து வந்திருக்கிறான்' என்று சொல்ல எல்லாரும்

* பூவின் மடலுக்குள்ளிருக்கும் காம்புகளை கள்ளன் கள்ளத்தியென்று சொல்வதுண்டு. ஸ்திரீ புருஷர்களென்று நினைக்கப்பட்டன வென்று விளங்குகிறது.

‡ இது குழந்தைகள் சந்தோஷப் பேச்சுமாத்திமல்ல சாஸ்திர ரீதியாயும் வண்டுகள் புஷ்பத்துக்கு புஷ்பம் கலியாணம் இசைத்துவைக்கும் கடகர்களே. அவை யில்லாது பல செடிகள் காய்க்கா.

சற்று களைப்பாற புன்னைமரத்தடிக்குப் போனார்கள். எதிரிலிருந்த மாந்துளிரைப் பார்த்து மரத்துக்குக்கூட யாரோ மாலை பட்டுவாங்கிக் கொடுக்கிறார்கள் போலிருக்கிறது. என்று அவர்களில் ஒருவர் சொல்லக்கேட்டு எல்லாரும் விளையாட்டாயிருக்கும் தருணத்தில் பூரணசந்திரன் பிரகாசிக்கையில் அதைவிழுங்க வந்த ராகுபோல் வாசற்படியில் எரிமூஞ்சி வந்து நின்றான்.

குழந்தைகள் உடம்பு பதறி, கல்லிலும் முள்ளிலும் வீழ்ந்து ஓடி, சிதறி, திரும்பிப்பாராமல் வீடு போய்ச் சேர்ந்தார்கள். இந்தப் பாவியும் பலே, நம்ப தோட்டத்துக்கும் ஆராவது வரலாமா என்று உளம் மகிழ்ந்து உட்சென்றான். அன்று முதல் தோட்டத்தில் பூவும் ஓய்ந்துவிட்டது. மரங்களும் புருஷனை இழந்த கைம்பெண்போல் பட்டாடைகள் உதிர, இலைகள்கூட மாற, மொட்டை மொட்டையாய் நிற்கத் தலைப்பட்டன. இவன் இதைக்கண்டு வருத்தமுற்று செய்யாத பிரயத்தினமெல்லாம் செய்துபார்த்தான். ஒன்றும் ஆகாதது கண்டு கன்னத்தில் கைவைத்து வீட்டில் கிடந்தான். இப்படி வெகுநாள் செல்ல, குழந்தைகளுக்குப் பயம்மாறி இன்னொருதரம் தோட்டத்துக்குப் போய்விட்டு வாவேண்டுமென்று தீர்மானித்து புறப்பட்டன. எரிந்துகிடந்த தோட்டத்துக்குள் குழந்தைகள் கால்படவே எங்கும் பச்சையாய், மரங்களில் புஷ்பம் சொரிய, பட்சிகள்பாட, எங்கும் வாசனைவீச, அசோக வனம்போல் ஆய்விட்டது. இந்த அற்புதத்தை ஒளிந்து பார்த்திருந்த எரிமூஞ்சிச் செட்டி, இதென்ன ஆச்சரியம் என்று ஒன்றும் சொல்லத் தோன்றாமல் மூக்கில் கைவைத்து இன்னம் என்னாகிறது பார்ப்போமென்று நின்றான். குழந்தைகள் முன்போல் அங்குமிங்கும் விளையாடிப் புன்னைமரம் வந்து சேர்ந்தார்கள். உட்காரவே அவர்கள் காதிற்கு ஒரு பாட்டுப் பாடுவதுபோல் பட்டது. அதைக் காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டிருக்கையில் நல்ல மாம்பழங்களும் உடுக்கப் பட்டாடைகளும் எதிரில் காணப்பட்டன. பழங்களை ஒருவருக்கொருவர் கொடுத்துத் தின்று வஸ்திரங்களை மேற்போட்டு ஆநந்தத்தில் மூழ்கினார்கள். அந்தப் பருவத்தின் ஆனந்தம் குழந்தைகளுக்கும் யோகிகளுக்கு மாத்திரமே கிடைக்கும்.

ஆச்சரியத்துக்கு அளவில்லாமல் திகைத்து நின்ற எரிமூஞ்சி ஐயோ நான் என்ன பாவம் செய்தேன்! இந்தக் குழந்தைகள் என்னைக்கண்டு ஓடுகின்றனவே, ஆனாலும் என் கண்குளிர ஒருதரம் பார்ப்பேனென வெளியே வந்தான். அவன் கண்ணில் படவே குழந்தைகள் முன்போல் மருண்டு ஓடின. அவர்களோடு புஷ்பங்களும் பக்ஷிகளும் ஓடின. இந்த க்ஷணத்தில் புன்னை மரத்தண்டை ஒரு சோதி உண்டாயிற்று. கோடி சூரியோதயம் போல் பிரகாசமும், ஆனந்தமே வடிவெடுத்ததுபோலுமிருந்த ஒரு எழுவயதுக் குழந்தை தென்பட்டது. அவன் மார்பில் அபர சூரியன் போன்ற கோஸ்துபமணியும் அந்த பாலசிகாமணியின் வாயில் புல்லாங்குழலும் காணப்பட்டது. இந்த திவ்வியமூர்த்தியும் பின் தொடர்ந்து அந்தர்த்தானமானார். "ஸநகாதி முனிவர் என்னைக் கண்டுபிடித்தாலும் பிடிக்கலாம் குழந்தைகளே நீங்கள் என் உயிர்த்தோழர்கள் அல்லவோ" என்று ஒரு சப்தம் ஆகாயத்தில் சுழன்று நின்றது. இவர் யாரென்று சொல்லவும் வேணுமோ? குழந்தைகளுக்கு வாத்தியம் வாசித்தவனும் இவனே. நந்தன் மாடோட்டும் இடைப்பையன்களோடு இடைப்பிள்ளையாய் விளையாடித் திரிந்ததும் இவனே.

குழந்தைகளுக்கு பழங்கள் ட்டுச்சொடுத்ததும், பிரஹலாதனென்ற குழந்தைக்கு ஒரு தீங்கும் வாராமல் காத்ததும் இவனே. மலையிலிருந்து தகப்பன் புரட்டித் தள்ளியபோது விழுமிடமெல்லாம் தலையணைபோல் கைவைத்து காப்பாற்றினதும் இவனே. தகப்பனால் பகைப்பட்ட துருவனென்ற 5-வயதுப் பாலனை வளர்த்து அழியாத பெருமை அவனுக்கு அளித்து அவன் தகப்பனுள்பட உலகமெல்லாம் அழிந்து போனவிடம் தெரியாதிருக்க அவனுக்கு மாத்திரம் சிரஞ்சீவியாய் சுயம்பிரகாசமாய் * உலகத்தாருக்கு வழிகாட்டும் விளக்காய், மணம்புரிவோருக்கு ஒரு பிரமாணமாய் ‡ ஆகாயத்தில் நட்சத்திர ரூபமாய் விளங்கும்படி செய்வித்தது யார்?

---

* துருவ நட்சத்திரம் ஆங்கிலேயர் 'போல்ஸ்டார்" என்று சொல்வதுதான். அது இருந்த விடம் பேராது வடக்கிலே எப்போதும் இருப்பதால் கப்பல் யாத்திரை செய்வோர்க்கு திசையைக் குறிக்கும் வெளிச்சக் கூண்டாகும். அன்றியும் மனிதர்களுக்குத் தன்னுடைய சரித்திரத்தினால் நல்வழியைக் காட்டுவானுவான்.

---

‡ கலியாண காலத்தில் ஸ்திரீ-புருஷர்கள் ஒருவருக்கொருவர் உண்மையாய் வாழவேண்டு மென்பதைப் போதிக்க டருஷனை துருவ நட்சத்திரத்தைப் பார் என்று சுட்டிக்காட்டி அவர் மாதிரியே உன் மனையாளுக்கு உண்மையாயிரு என்று சொல்வார்கள்.

எல்லாம் ஈதை என்ற அமிர்தத்தை அளித்தவரும் பெரியோர்களுக்கு அரியரும் குழந்தைகளுக்குத் தோழருமான பகவான் தான். குழந்தைகளுக்குத் தோழன் பகவான் என்பது இதினால் நன்ருய் விளங்கும். தன்வேலை யெல்லாம் விட்டு பகவான் குழந்தை தூங்கும் தொட்டிலில் வந்து தாமரைப்பூவைச் சுற்றி விளையாடத் தூக்கத்தில் குழந்தைகள் சிரிக்கிறது யாருக்குத் தெரியாது? பகவானுடைய அருமைத் தோழர்களான குழந்தைகளை வெறுக்கும் எரிமூஞ்சிச் செட்டியும் தன் பிசகை இன்னதென்று அறிந்து நற்குணமடைந்தான்.

———:(‡):———

## Notes and Reviews.
## வர்த்தமானக் குறிப்பு.

### இராஜப் பிரதிநிதிவிஜயம்.

நமது ராஜப்பிரதிநிதி யாகிய ஹார்டிஞ்சு பிரபு அவர்கள் நவம்பர் மாதம் இங்கு வருவாரென்றும் வருகையில் மதுரை, திருச்சி, தஞ்சை முதலிய ஜில்லாக்களுக்குப் போய்விட்டுவருவாரென்றும் அறிகிறோம். அவர் வரவைக் கொண்டாடுவதற்காக அங்கங்கு சபைகூடி கமிட்டியேற்படுத்தி யிருக்கிருர்கள். நாமும் குழந்தைகள் நல்வரவு கூறும் பத்திரமொன்று பிரசுரித்திருக்கிறோம். இதையெல்லாக் குழந்தைகளும் பாடம் பண்ணிக்கொண்டு அவருக்கு நல்வரவுகூறல் வேண்டு மென்பது நமது கோறிக்கை.

**தஞ்சாவூர்.**—செப்டம்பர்மாதம் 6-ந் தேதி மார்வ்ஷ் ஹாலில் தஞ்சைவாசிகள் தஞ்சை கலெக்டர் Mr. Wood கேட்டுக் கொண்டபடி ராஜப் பிரதிநிதி யவர்கள் தஞ்சைக்கு வரும் பொழுது என்னமாக நல்வரவைக் கொண்டாடலாமென்பதை யோஜிக்கக் கூடி இருந்தார்கள். கடைசியில் நல்வரவுபசாரப்பத்திரம் ஒன்று முனிசிபாலிட்டிக்காகவும் லோகல் போர்டுகளுக்காகவும் வாசித்தளிக்க வேண்டு மென்று தீர்மானிக்கப்பட்டது. அங்கு அதற்காக சந்தா சேர்த்ததில் ரூ 1650 கூடுதலாயிற்று.

**திருச்சி.**—திருச்சியில் நமது ராஜப்பிரதிநிதியை நல்வரவுங்காண்டாடுவதற்கான ஏற்பாடுகள்செய்வதற்காக ஒருகூட்டம் கூடப்பட்டது. திருச்சிகலெக்டர் மிஸ்டர் பக்லி ஐ. ஸி. எஸ். (Mr. Buckley I. C. S.) அக்கிராஸனத்தை வஹித்தார் ராஜப்பிரதிநிதி அவர்களுக்கு நல்வரவுபசாரப் பத்திரம் கொடுக்க வேண்டு மென்று தீர்மான மாயிற்று. அங்கு இருந்தவர்களிலிருந்து சிலர் ராஜப்பிரதிநிதி அவர்கள் வரவைக் கொண்டாடுவதற்கு வேண்டியவைகளைச்செய்ய ஒரு கமிட்டியாக ஏற்படுத்தப்பட்டார்கள். மிஸ்டர் எல்டர் எஸ். ஐ. ஆர். (Mr. Elder S. I. R.) குழந்தைகளைச் சந்தோஷப்படுத்த வேண்டு மென்றும் வைஸியராய் வரும் வழியில் அவர்களை வரிசையாய் நிறுத்திவைத்து ராஜப்பிரதிநிதியைக் கொண்டாட வேண்டு மென்றும் சொன்னார். இது ஓர் நல்லயோஜனைதான். "குழந்தை முகம்காணக் கோடி கவலைதீரும்" என்பது பழமொழி. பிறகு கலெக்டர் அவர்கள் உடையார் பாளையம் ஜமீன்தாரவர்கள் வரமுடியாததற்காக விசனிப்பதாகவும் அவர் ராஜப்பிரதிநிதி நல்வரவுபசாரச் செலவுக்காக 400ரூபாய் கொடுப்பதாகஎழுதி யிருப்பதாயும் சொன்னார்.

சென்னை கார்பரேஷன் கூட்டத்தில் ராஜப்பிரதிநிதியவர்களுக்கு நல்வரவுபசாரப்பத்திரம் கொடுக்க வேண்டு மென்றும் ராஜப்பிரதிநிதி அவர்களை புதிய கார்பரேஷன் ஆபீஸாகிய ரிப்பன்(Ripon Building.) கட்டடத்தைத் திறக்கும்படி கேட்டுக் கொள்ள வேண்டும் என்றும் தீர்மானித்தார்கள்.

திருவல்லிகேணியில் இந்தியசிறுவர்களுக்குகிண்டர் கார்டன் சொல்லிக்கொடுப்பதற்காக ராய்பகதூர் A.C. பிரணதார்த்திகர அய்யரை பிரஸிடெண்டாககொண்டு ஒரு சபை ஏற்பட்டிருக்கிறது. மிஸ்ஸஸ் பிராண்டர் காலத்தில் கிண்டர் கார்டனுக்காக என்று மிஸ்ஸஸ் பிராண்டர் முதலியவர்களின் உதவியால் 20 வருஷமாய் உழைத்த நமது விவேக சிந்தாமணி இப்பொழுதும் பால போதக விஷயத்தில் கிண்டர் கார்டன் முறையை அநுசரித் துழைப்பாருக்கு உதவியாக உழைக்கத் தயாராயிருக்கிறது. பால பிருந்தாவனமாகிய "கிண்டர் கார்டன்" முறை குழந்தை மனம் அறிந்து குழந்தைகளா யிருக்கக் கற்ற மஹானுபிப் ப்ரோபெஸ் அவர்களால் ஏற்படுத்தப்பட்டது. அது "வாலவித்தை" என்றும் "பாலாஉபாஸனை" யென்றும் சொல்கிற "Child Study" வித்தை யன்றிவேறல்ல, "குழந்தையையும் தெய்வமும் கொண்டாடு மிடத்தில்" ஆதலால் ஹிருதயத்தில் அன்பு பூரித்து குழந்தைகளைத் தெய்வாம்சமாகக் கொண்டாடுவோருக்கே இந்த வித்தை வித்திக்கும்.

## விமர்சனைக் குறிப்பு.

———:*:———

### ஆதங்க நிக்ரக ஔஷதசாலை.

ஜாம் நகரில பிரதான ஸ்தலத்தை உடையதும் சென்னை, பம்பாய், கல்கத்தா இன்னும் மற்ற இடங்களிலும் கிளைகளையுடைய ஆதங்க நிக்ரக ஔஷதசாலையின் சொந்தக்காரராகிய வைத்திய சாஸ்திரி மணிசங்கர் கோவிந்தஜியினிடமிருந்து ஔஷதசாலையின் 'ஆல்பம்' (Album) ஒன்று வரப்பெற்றோம். அதில் நமது மாக்ஷிமை தங்கிய சக்கிரவர்த்தி சக்கிரவர்த்தினியாரின் படமும் ஔஷதசாலையை ஸ்தாபித்தது முதற்கொண்டு அதற்கு போஷகராய் இருந்து வருபவரும் கிரிக்கெட் விளையாட்டில் பேர்போனவருமான ராஜா ரஞ்சித சிங்ஜிஸாஹேப் பஹதூரின் படமும், ஔஷத

சாலையின் சொந்தக்காரராகிய வைத்திய சாஸ்திரி மணிசங்கர கோவிந்தஜியின் படமும், ஔஷதசாலையின் கட்டிடங்களையும் சிப்பந்திகளையும் உடைய படங்களும் இருக்கின்றன. இப்படங்களால் ஔஷதசாலையின் மேன்மை நன்றாய்த் தெரியவருகிறது. "முயற்சி திருவினை யாக்கும்'' என்கிற முதுரைக்கு இது அத்தாக்ஷியாக விருக்கிறது.

---

## குசாவதி.

ஞானகாந்தி, மதிமாலினி என்னும் புஸ்தகங்களை இயற்றியவரான செ. ராஜு செட்டியார் அவர்களிடமிருந்து அவர் இப்பொழுது நூதனமாய் இயற்றியுள்ள குசாவதி அல்லது ஓர் வஞ்சக வனிதையென்னும் புஸ்தகத்தை வரப்பெற்றோம். இப்புஸ்தகத்தில் ஆசிரியர் ஸ்திரீகளின் சாதுர்யத்தை நன்றாய் விளக்கிக் காட்டியிருக்கிறார். இதில் சொல்லப்பட்டிருக்கும் குசாவதி என்னும் வனிதை பணம் என்னும் பேயை வணங்குகிறவள். ஆகையினால் பணத்தை சம்பாதிக்க தீய செய்கைகள் செய்ய அஞ்சவில்லை. கடைசியில் அவளுக்கும் மனவிருள் நீங்கி விவேகம் பிறக்கின்றது. இதனால் கெட்டவர்களுக்கும் அவர்கள் பட்ட அனுபவத்தினால் தெய்வபக்தி கொஞ்சம் உண்டாகிக் கடைசியில் முற்றுகிறது ("Even the devil has a concience that leads the devil to virtue'') என்பது தெரியவருகிறது. ஆசிரியரது முகவுரையிலிருந்து இப்புஸ்தகம் குசாவதியைப் போன்றவர்கள் யாராவது இருந்தால் அவர்கள் இதைப்படித்தாவது திருந்தட்டும் என்கிற எண்ணத்தோடு எழுதப்பட்டதாக தெரியவருகிறது. மற்றவர்களுக்கும் இது உபயோகந்தான் "களவையும் கற்றுமற" வென்றிருப்பதனால் தீமையையும் கண்டு விலகலே உத்தமம்.

—(:-:)—

## ஆநந்த கிருஷ்ணன்.

ராஜாம்பாள், சந்திரகாந்தா, மோஹன சுந்தரம் என்னும் மூன்று துப்பறியும் நாவல்களின் ஆசிரியரும், கிருஷிகன் பத்திராசிரியருமாகிய ஜே. ஆர். ரங்கராஜு அவர்கள் நூதனமாய் இயற்றியுள்ள ஆநந்த கிருஷ்ணன் என்னும் துப்பறியும் நாவல் வரப்பெற்றோம். இதில் ஆசிரியர் கெட்ட பழக்க வழக்கங்களை முளையிலேயே தவிர்க்க வேண்டும், இல்லாவிடின் அது மனிதரை துன்பத்திற்கு ஆளாக்கி அவர்களை அழித்துவிடும் என்பதையும் ஸ்திரீகளைவிடப் புருஷரே திடசித்தர்களென்பதையும் நன்றாக விளக்கிக்காட்டி யிருக்கிறார்.

இக்கதையானது வாசகர்களுக்கு படிக்க சுவாரஸியமாக இருப்பதோடுகூட செடியில் நிமிர்த்தாத கோணலை மரத்தில் நிமிர்த்த முடியாதாகையினால் தீய எண்ணங்கள் தோன்றினால் உடனே திடசித்தம் என்னும் கோடாலியினால் வெட்டிவிட வேண்டுமென்னும் நீதியைப் போதிக்கிறது.

---

"சிரிக்கச்சிரிக்கப் பொழுதுபோக்கும் தோழன்'' என்னும் பெயருடைய புஸ்தகம் ஒன்று வரப்பெற்றோம். இது கோயம்புத்தூர் சி. எஸ். ராமதுரையவர்களால் எழுதப்பெற்றது. இப்புஸ்தகத்தில் சிரிப்பையும் அதோடு நீதியையும் போதிக்கிற சம்பாஷணைகளையும் ஆங்கிலேயத்தில் சில பத்திரிகைகள் எழுதுவதுபோல் தமிழில் எழுதி இருக்கின்றனர். வேண்டுவோர் புஸ்தக ஆசிரியரிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

---

## ஸ்ரீபக்தமாலா வசனம்.

ஸ்ரீமான் வே. பாலகிருஷ்ண முதலியாரால் மஹாராஷ்டிர பாஷையிலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு மாதம் ஒன்றுக்கொரு சஞ்சிகையாகப் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன. இவைகளை சென்னப்பட்டணம் திருவல்லிக்கேணி பி. எஸ். ராமகிருஷ்ணய்யரிடமிருந்து வரப்பெற்றோம். இவைகளில் ஜயதேவர் துளஸிதாசர், புண்டரீகர், ஞானதேவர், துக்காராம் பாவா போன்ற 182 மஹான்களின் சரித்திரங்கள் அடங்கியிருக்கின்றன. இப்பேர்ப்பட்ட மஹான்களின் சரித்திரம் ஒவ்வொருவீட்டிலும் இருக்கவேண்டியது அவசியம் என்பது நமது அபிப்பிராயம். இவர்களே நம் தேசரக்ஷகர்கள். க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாகயோகத்தால் நித்திய வாழ்வெய்தினவர்களாதலால் இவர்களைப்போன்ற மஹான்களே நம்தேச போஷகர்களும் தேசரக்ஷகர்களு மாவார்கள்.

---

### "சென்னை வியாபாரி."

தென்னிந்தியா வர்த்தக ஆலோசனை சபை யாருடைய உத்தரவின்பேரிலும் ஆதரவின் பேரிலும் பிரசுரிக்கப்படும் "சென்னை வியாபாரி" என்கிற பத்திரிகையின் நான்காவது சஞ்சிகை வரப்பெற்றோம். இப்பத்திரிகை மெஸ்ஸர்ஸ் மவுலானா அப்துஸ் சுப்ஹான் ஸாஹேப், வி. துரைசாமி அய்யங்கார் பி. ஏ. அவர்களால் நடத்தப்பட்டு வருகிறது. இவர்களில் முதல்வர் சென்னப்பட்டணத்தில் பேர்போன வியாபாரி. பின் கூறினவர் தென்னிந்தியா வர்த்தக ஆலோசனை சபையின் உதவி காரியதரிசி. இதில் வியாபார விஷயங்களைப்பற்றிச்சொல்லியிருப்பதால் இது எல்லா வியாபாரிகளுக்கும் உபயோகமாயிருக்கும் என்பது நமது அபிப்பிராயம்.

---

பண்டிதர் எஸ். எஸ். ஆனந்தம் இடமிருந்து அவர் செய்யும் கடிமருந்து (Ringworm cure) ஒரு டப்பி வரப்பெற்றோம். இது கடி, தேமல், முதலான படர் வியாதிகளுக்குக் கைக்கண்ட ஔஷதமாகும்.

---

"ராமபாணம்" என்னும் மருந்துக்கு ஏஜன்ட்டுகளாகிய A கேசவ்ஜி தேவசந்த் இடமிருந்து "ராமபாணம்" என்னும் மருந்தின் மாதிரிப் புட்டி ஒன்றுவர வந்தனத்துடன் பெற்றோம். அதுஜனங்களை சாதாரணமாய்ப்பீடிக்கும் வியாதிகளைத் தீர்ப்பதால் வீட்டில், கையிருப்பாய் வைத்திருக்கில் சமயத்துக்கு உபயோகமாயிருக்கும்.

—————):o:)—————

### ஓர் குறத்திசெய்த அக்கிரமம்.

சில நாட்களுக்கு முன்பு சூளையில் ஒரு வீட்டில் சுமார் காலை எட்டரை மணிக்கு மூன்று வயது பூர்த்தியாகாத ஒரு பெண் குழந்தை வீட்டில் விளையாடிக் கொண்டிருந்த போது பிச்சைக்கு வந்த ஒரு குறத்தி அவ்விடம் நின்று கொண்டிருந்த குழந்தையைத் தன்னருகே வரும்படி இழுக்க அக்குழந்தை "அம்மா இழுக்கிறாள்" "அம்மா இழுக்கிறாள்" என்று கூவி அழவும் வீட்டுக்குள் இருந்த தாய் இச்சத்தத்தைக் கேட்டு தன்னருகே இருந்த ஒரு கிழவியை நோக்கிப் போய்ப்பார்த்து வரும்படி சொல்ல அவ்வம்மை வருவதற்குள், குறத்தி தெருக்கதவண்டை வந்து விட்டாள். பிறகு சங்கதி தெரிந்து அவளை வைது அனுப்பி விட்டார்கள். குழந்தைக்கு ரூபா 13-மதிப்புள்ள பொன் அரைமுடி அணிந்திருந்தது. அவள் இழுக்கும் போது கூவாமலிருந்திருந்தால் அக்குழந்தையின் கதி இன்னவிதமாய் முடிந்திருக்குமென்று சொல்ல முடியாது. கொஞ்ச நாளைக்கு முன் மைலாப்பூரில் அநேக நகைகள் அணிந்திருந்த குழந்தைகளை எடுத்துக் கொண்டு போய் நகைகளைக் கொள்ளை கொண்டது மல்லாமல் உயிரையும் மாய்த்துவிட்டது அநேகருக்குத் தெரிந்திருக்கலாம்.

சாதாரணமாகப் பிச்சை எடுக்கவரும் குறவர்களே இம்மாதிரியான துணிகரச் செயல்களைச் செய்ய முயலுவதால் பெற்றோர்கள் தம் குழந்தைகளைப் பராமரிப்பதில் ஜாக்ரதையாக விருக்கவேண்டும். போலீஸாரும் கொஞ்சம் கவனம் செலுத்தினால் நலமாயிருக்கும்.

---

"THE CHILDREN'S DAY RECORD"—The July Vivekachintamani' is a record number. It is the best Children's Day record in Tamil. Lord Hardinge's birthday is bound to become an abiding institution in India and it is an excellent idea of the Editor. in view of His Excellency's forthcoming visit to this Presidency. to collect together in a record number all the standing information on the subject necessary to enlighten and interest the child-mind. It is "the Viceroy Memorial Edition" and deals with subjects closely connected with the Viceroy.—*The Hindu 13th August 1913.*

*The Madras Standard of the same date in endorsing the above view of its importance adds.*—"We are requested to state that in view of the disappointments previously caused to many school children owing to short supply. sufficient precaution has been taken to supply all demands for school and home use. Application for copies should reach the publishers within a fixed time. say within a month from the date of publication"—

"THE CHILDREN'S DAY RECORD."—The July issue of the Vivekachintamani is a Children's Day record in Tamil issued in connection with Lord Hardinge's birthday celebrations. It is an excellent idea of the Editor. in view of His Excellency's forthcoming visit to this Presidency. to collect together in a record number all the information on the subject necessary to enlighten and interest the child-mind. The issue deals with subjects closely connected with the Viceroy.—*The Madras Mail of 14th August. 1913.*